# கவிஞன் உள்ளம்

ஆக்கியோன்

வித்துவான் ந. சுப்பு ரெட்டியார் பி.எ. பி. எஸ்ஸி., எல்.டி.

தலைமையாசிரியர்,

ஜமீந்தார் உயர்நிலைப் பள்ளி, துறையூர்.



கலைவளர்ச்சிப் பதிப்பகம்,

துறையூர், : : திருச்சி மாவட்டம்.

## காணிக்கை

திருந்திய வுளத்தை மாலடிக் காக்கிச்
சேவையைத் தமிழ்மொழிக் காக்கிப்
பொருந்திய லமுதை யார்வலர்க் காக்கிப்
புலமையை யடக்கத்திற் காக்கி
மருந்தெனும் கருணை யெம்மனோர்க் காக்கி
மனத்துற வெய்திய பெரியோன்
அருந்தமிழ்க் குரிசில் வேங்கடராசன் *
அடிமலர்க் குரிய திந்நூலே.

* சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றி அண்மையில் ஓய்வு பெற்றுள்ள பன்மொழிப் புலவர் திருவாளர் வே. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள்

# பதிப்புரை

"கன்னற், பொருள் தரும் தமிழே நீ ஓர் பூக்காடு; நானோர் தும்பி!" என்றார் புதுவைக் கவி பாரதி தாசன் அவர்கள். தமிழ் இலக்கியப் பூங்காவில் ஏராளமான நறுமலர்கள் இருக்கின்றன; தமிழ் இளைஞர்கள் யாவரும் தும்பிகளாக ஆக வேண்டும் என்பதே இந்த நூலாசிரியரின் நோக்கம். எங்கள் நோக்கமும் அதுவே.

எவரும் எளிதில் படிப்பதற்கேற்றவாறு நூல் எளிய இனிய நடையில் அமைந்திருக்கிறது தமிழ் இலக்கியப் பூங்காவில் செல்ல முடியாத இடங்களுக்கும் மக்களைக் கூட்டிச் செல்ல வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். அந் நோக்கத்தை ஓரளவு இந்நூல் முற்றுவிக்கிறது.

தமிழ் ஆர்வம் மிக்க மாணவர்களுக்கு இந்நூல் ஒரு அரிய விருந்தாக இருக்கும் என்பது எங்கள் நம்பிக்கை. மாணவர்களின் மனப் பக்குவங்களை யெல்லாம் அனுபவத்தில் நன்கு அறிந்த இந் நூலாசிரியர் அவர்கள் மனோநிலைக்கேற்றவாறு நடையையும் கட்டுரைகளின் போக்கையும் அமைத்திருக்கிறார் என்றே சொல்ல வேண்டும். இந்நூல் மாணவர்கட்குத் தமிழ் இலக்கியத்தில் ஒரு ஆசையை ஊட்டும் என்பதற்குத் தடையில்லை.

எங்கள் பதிப்பகத்தின் முதல் நூலாக இந்நூல் வெளி வருகிறது. பொதுவாகத் தமிழ் மக்களையும், சிறப்பாகத் தமிழ் ஆர்வம் மிக்க மாணவர்களையும் எங்களை இப்பணியில் ஊக்குவிக்குமாறு வேண்டுகிறோம்.

— கலைவளர்ச்சிப் பதிப்பகத்தார்.

# முன்னுரை

இன்று பல்லாயிரக் கணக்கான தமிழ் மக்கள் பத்திரிகை வாசித்து வருகிறார்கள். புஸ்தக வாசகர்களும் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். தமிழர்கள் பரந்த உலகம் தெரிந்து வாழ விரும்புகிறார்கள். தூரத்தைச் சமீபமாக்கிப் பரந்த உலகத்தைச் சுருக்கிக் காட்டும் விஞ்ஞான அதிசயங்களையும், பயமுறுத்தும் விஞ்ஞான விபரீதங்களையும் அறிந்து ஆட்கொண்டு வசதியாக வாழ்க்கை நடத்த விரும்புகிறார்கள். ஆம்; இன்றைய சுதந்திர இந்தியாவின் இன்றியமையாத பகுதியாகத் தமிழ் நாடு தன்பிற்காலக் "கிணற்றுத் தவளை" வாழ்வை விட்டு விடுதலையாகிக் கடல் போன்ற ஒரு புது வாழ்வை நோக்கிச் செல்ல ஆசைப்படுகிறது. இந்தப் புதுமைப் பெருவாழ்வில் காந்நீயம் போன்ற உயர்ந்த லட்சியங்களுக்கு விசேஷ இடம் உண்டு என்பதில் சந்தேகமில்லை. இந்த நம் ஆசைகள், அச்சங்கள், கருத்துக்கள், நம்பிக்கைகள், லட்சியங்கள், பரபரப்புகள், துடிப்புகள், ஆகியவற்றை உள்ளபடியே பிரதிபலித்து நம் மக்களிடையே ஒரு புதுவாழ்வியக்கத்தைத் தோற்றுவிக்கக் கூடிய சக்திகளைப் படைத்து விடும் முறையில் நம் புதுமைத் தமிழிலக்கியம் வளர்ந்தோங்க வேண்டும். இந்த இலக்கியம் ஆழமாக வேரூன்றி வளர்வதற்குச் சங்க காலம் தொட்டுத் தமிழிலே வளர்ந்து வந்திருக்கும் இலக்கியங்களையும் தேவைக்குத் தகுந்த முறையில் பயன் படுத்திக் கொள்ளலாம். அந்தப் பழைய இலக்கியங்களிலுள்ள பண்பாடும் லட்சியங்களும் காந்நீயத்திற்கு அரணாகி நமக்குத் தரும் கவசமாக அமையவும் கூடும்.

நம் புதுமை இலக்கியத்தின் இன்றைய நிலை என்ன? எழுத்தாளர்கள் சிறு கதைகளை எழுதிக் குவித்த வண்ணமாயிருக்கிறார்கள். 'நாவல்'கள் என்ற நீண்ட நவீன கதைகளும் இடையிடையே வெளியாகின்றன. சிறு கதைகளும் பெருங்கதைகளும்

பெரும்பாலும் தழுவலாகவும், மொழி பெயர்ப்பாகவும், நமது வாழ்வோடு ஒட்டாத காதற் கதைகளாகவும் இருந்த போதிலும் இவற்றிற்கெல்லாம் வாசகர் பலர் இருக்கிறார்கள் என்பதில் ஐய மில்லை. கவிதைத் துறையிலும் சிலர் புது முறைகளைக் கையாண்டு பலருக்கும் இன்பமூட்டி வருகிறார்கள். இவர்களில், பழமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலம் போல் கவிதை இயற்றி வரும் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையையும், தேசீயம், காந்தீயம் என்ற புதிய சக்திகளைப் பாடிப் பரப்பி வரும் நாமக்கல் கவிஞரையும் சமுதா யப் புரட்சிக் கவிஞரான 'பாரதி தாசன்' அவர்களையும் முத்திறப் புதுமைக் கவிகளாய்க் குறிப்பிடலாம். இவர்கள் பாரதியார் தோற்றுவித்த மறுமலர்ச்சி —இலக்கியத்தை,

**அரிதாள் அறுத்துவர**
**மறுதாள் பயிராகும்**

என்ற ரீதியில் மறு போகமாகப் பயிர் செய்து வருகிறார்கள்.

'அழகுக் கலையின் ஆணிவேர்' என்று கருதத்தக்க நடனமும் இன்று புத்துயிர் பெற்று வருகிறது. **ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல்** போன்ற அறிஞர்கள் இத்துறை யில் பிரவேசித்திருப்பதே நமது நாட்டியக் கலையின் மறு மலர்ச்சிக்குத் தக்க சான்று. இசைக் கலையும் பொதுமக்கள் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்து வருகிறது. தமிழிசை-இயக்கத் திற்கும்,கர்நாடக சங்கீதத்திற்கும் போட்டியும் பூசலும்-ஏசலுங் கூட — இன்று அதிகமாய் இருந்தபோதிலும், நாளடைவில் இரண்டு இசை இயக்கங்களும் கங்கையும் யமுனையும் (கங்கையும் காவிரியும் என்றே சொல்லலாம்) போலக் கலந்து நம் புது வாழ் வியக்கத்திற்கு வளமும் வனப்பும் அளித்து உதவும் என்று நம்பலாம்.

நம் புதுவாழ்வியக்கத்திற்கும் விஞ்ஞான வளர்ச்சிக்கும் புதிய இலக்கியப் பெருக்கிற்கும் கங்கை காவிரியின் சங்கமம்

தான் போதுமா? தேம்ஸ் நதியையும் நம் காவிரி சந்திக்க வேண்டியதுதான்! 'நயகரா' நீர்வீழ்ச்சியின் பேரிடிகளையும் கேட்கவேண்டியதுதான்! 'ஆஹாவென்றெழுந்தது பார் யுகப் புரட்சி!' என்று பாரதியார் பாடியிருக்கிறாரே, அந்த ரஷ்யப் புரட்சி இடிக்குரலில் பேசி. மின் - எழுத்துக்களில் எழுதிவரும் புத்தம் புதிய இலக்கியத்தையும் நாம் பயன்படுத்திக்கொள்ளலாம். ஆனால் தமிழ் வளரும் புதிய புதிய துறைகளில் எல்லாம், தமிழின் உயிர்நாடி பேசவேண்டும்; சங்க இலக்கியங்களில் கொலு விருக்கும் அரசிளங் குமரியின் அதிகார முத்திரை வேண்டும்; அதாவது, தமிழ் தமிழாக வளரவேண்டும்.

நம் இலக்கிய வளர்ச்சிநெறியைச் சிறிதும் தெரிந்து கொள்ளாமல் பிற இலக்கியங்களின் உதவியால் மட்டும் தமிழை வளர்த்துவிட இயலாது. புதிய புதிய கருத்துக்களை வெளியிட லாம்; வெளியிடத்தான் வேண்டும். புரட்சிகரமான கருத்துக் களையும் காரசாரமாக வெளியிடலாம்; பாரதியார் வெளியிட வில்லையா? அவற்றை வெளியிடுவதற்குப் புதிய புதிய சொற்களை யும் சொற்றொடர்களையும் கொண்டு வரலாம். வேறு மொழி களிலிருந்து கருத்துச் செல்வத்துடன், வேறு நாடுகளிலிருந்து கலைச் செல்வங்களுடன், விஞ்ஞானச் செல்வங்களுடன், இன்றிய மையாத சொற்செல்வத்தையும் கொண்டு சேர்த்து வீட்டு மொழி யின் பொக்கிஷத்தைப் பெருக்கிக் கொள்ளலாம். ஆனால் பாரதியாரைப்போல், பாரதிதாசனைப்போல், கவிமணியைப் போல் தமிழின் பண்போடு கூடிய ஜீவசக்தியை உணர்ந்து எழுத வேண்டும்; பாடவேண்டும். அப்போதுதான் பழமைக்கும் பழமை யான தமிழ், புதுமைக்கும் புதுமையாக வளர்ந்தோங்க முடியும்.

தமிழ் ஒரு குழந்தைப் பாஷையன்று; சங்ககாலம் தொட்டு — ஏன், அதற்கும் முன்பே — எவ்வளவோ காலம் கண்டு, எத்தனையோ நிகழ்ச்சிகள் கண்டு, கருத்து வேற்றுமை

களும் கொள்கை முரண்பாடுகளும் கண்டு, தொல்காப்பியர், திருவள்ளுவர், கம்பர் போன்ற மேதாவிகளையும் குழந்தைகளாக அணைத்துக் கொண்டு தாய்மைப்பண்பு பெற்று வளர்ந்து வந்திருக்கும் தாய்மொழியல்லவோ நமக்கு வாய்த்திருக்கிறது? காலவகையால் பழையன கழியப் புதியன கண்டு வந்திருக்கிறது. இன்னும் புரட்சிமயமான புதுமைகளையும் காணப் போகிறது. இம்மொழியின் இலக்கிய சரிதமே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தொடங்கியிருக்கவேண்டும் என்பதை ஆராய்ச்சியாளர்கள் ஒருமுகமாய் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த இருபது நூற்றாண்டு வளர்ச்சி நெறியிலும் மைல் கற்கள் உண்டு — வளர்ச்சி நெறியை இன்னும் நாம் அறியக்காட்டும் மைல்கற்கள்.

இத்தகைய தமிழிலக்கியப் பரப்பிலே ஆதி மைல் கல்லைத்தான் சங்க இலக்கியம் என்று வழங்குகிறோம். ஆதிமைல்கல் அதிமுக்கியமான மைல்கல்லாகவும் இருக்கிறது. தமிழ்ப்பண்பையும் தமிழர் பண்பாடுகளையும் உள்ளவாறு உணர்ந்து கொள்வதற்குச் சங்கநூல்களை அறிந்து கொள்ள வேண்டியது இன்றும் அவசியமாகவே இருக்கிறது.

சங்க இலக்கியத்தைப் 'பத்துப் பாட்டு' 'எட்டுத் தொகை' என்று இருபெருங்கூறுகளாகப்பகுத்துப் பேசுகிறார்கள். இவற்றில் எட்டுத் தொகையிலுள்ள நற்றிணை, அகநானூறு, புறநானூறு, கலித்தொகை என்ற நான்கு தொகை நூல்களிலிருந்தும் இந்த ஆசிரியர் பன்னிரண்டு உயிரோவியங்களைத் தேர்ந்தெடுத்துப் 'பாருங்கள் இந்தக் கவிதைச் சித்திரங்களை!' என்று காட்டுகிறார். இது போன்ற நன் முயற்சிகளே சங்க நூல்களின் தனி மேதையையும் சங்கப் புலவர்களின் அறிவுத் திறனையும் புலமை வளப்பத்தையும் இந்நாளில் பத்திரிகைகள் கதைகள் படிக்கத் தெரிந்த தமிழ் வாசகர்களுக்கும் ஒருவாறு அறிவிக்கக் கூடும்.

சங்கம் வளர்த்த தமிழ்க் கடலிலே திரண்டெழுந்த அமுத மாகிய திருக்குறள் இந்த ஆசிரியரின் இரண்டு கட்டுரைகளில் இடம் பெற்றிருக்கிறது. இக்கட்டுரைகள் நிவேதனமாக அமைந் திருப்பது பொருத்த முடையது. இவ்வாசிரியர் 'நாலடியார்' என்ற நீதிச் சுரங்கத்தையும் நினைப்பூட்டிச் செல்கின்றார்.

வழியில் 'சிந்தாமணி'யையும், மணிவாசகப் பெருமானின் இரண்டு மணிகளையும் மறந்து விடவில்லை. சங்க நூல்களில் அரியாசனம் பெற்றிருக்கும் அரசிளங்குமரியை' என்றும் குமரி யாக்கிச் சக்கரவர்த்தினியாகவும் முடிசூட்டி வைத்த கவிச் சக்கர வர்த்தியின் காவிய அரண்மனையிலே, முன் வாசற் பூஞ்சோலையில் சாதாரணமாக மலர்ந்திருக்கும் நான்கு மலர்களைத் தம் புலமைத் திறமையால் மணம் மிக வீசக் காட்டிச் செல்கின்றார் ஆசிரியர்.

திருவிளையாடற் புராணத்தையும் காஞ்சி புராணத்தை யும் நளவெண்பாவையுங்கூட மறந்துவிடாமல் மைல்கற்களாக்க் காட்டித் தமிழின் 'ராஜபாதை'யை நீளக்காட்டிவிடுகிறார். நமது இன்றைய புரட்சிக் கவிஞரையும் கண்டுகாட்டி, 'இப்படியே இன் னும் எத்தனையோ மைல்கற்கள்!' என்று உய்த்துணர வைக்கிறார்; புரட்சிகரமான மாறுதல்களிலும் பொற்சரடுபோல் சங்ககாலத் தமிழ்ப் பண்பு ஊடுருவிக் கிடக்கும் என்பதையும் சுட்டிக்காட்டு கிறார்.

இந்த ஆசிரியரின் தமிழ் நடை காலத்திற்கு இசைந்து வளர்ந்து வரும் நடைதான். வளரும் தமிழில் மலரும் இலக்கியத் திற்கு உரியநடை. இத்தகைய நடைதான் 'நல்ல தமிழ்' இக்காலத் திற்கு. சங்கநூற் கட்டுரைகளையும் இத்தகைய வசன நடையில் எழுதினால்தான், சாதாரண உலக இன்பம் முதல் உயர்ந்த கொள்கைகள் வரையில் அறிஞர்கள் சங்க இலக்கியங்களிலே கண்டு களிக்கிறார்களே, அந்தக் கருத்துச் செல்வம் முழுவதும்

*சாதாரண மக்களுக்கும் பயன்படுவதாகும். சுதந்திர இந்தியாவில் தமிழர்களின் புதுமைப் பெருவாழ்வியக்கத்திற்கு,*

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**

*என்பது போன்ற பழந்தமிழ்க் கொள்கைகளும் இன்றியமையாதன அல்லவா?*

*இந்நூலில் அடங்கியிருக்கும் சங்கநூற்கட்டுரைகளிலும், வேறு இலக்கியக் கட்டுரைகளிலும் ஆசிரியர் தாய் தமிழ்க் கடலில் மூழ்கி முத்துக்குளித்துவந்து 'இதோ பாருங்கள் சில ஆணித்தரமான முத்துக்களை!' என்று காட்டுகிறார். தரம் அறிந்து 'முத்தும் முத்தமிழும்' போற்றிய தமிழ் நாட்டின் தற்காலமக்கள் இந்த ஆசிரியர் காட்டும் முத்துக்களையும் தக்க முறையில் மதித்துப் போற்றுவர் என்பது என் நம்பிக்கை.*

"அருணகிரிஸ்" }
11—1—49 }

பி. ஸ்ரீ.

# ஆக்கியோன் முகவுரை.

1941-ம் ஆண்டு ஜூன் திங்கள் பள்ளித்தலைமை ஆசிரியர் பதவியை ஏற்றவுடன் யான் செய்ய வேண்டிய பல வேலைகளில் பள்ளி நூல் நிலயத்தை நிறுவ வேண்டியதும் ஒன்றாக இருந்தது. புதிய பள்ளியாதலால், ஆராய்ந்து எல்லாவித நூல்களையும் வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏற்படவே, கவிஞர் பாரதியார் நூல்களையும் வாங்கினேன்.

எந்த நூல்களை வாங்கினாலும் ஒரு முறை அவற்றைப் படித்து விடுவது என்ற வழக்கத்தை யான் மேற்கொண்டிருக்கிறேன். ஆகவே, பாரதியார் நூல்களை முழுவதும் படிக்கத் தொடங்கினேன். அதற்கு முன்னதாகவே பாரதியாரின் பாடல்களில் சிலவற்றைக் கேட்டிருக்கிறேன். என்றாலும், அவரது நூல்கள் முழுவதையும் படிக்கும் பேறு அப்போதுதான் கிடைத்தது. அதற்கு முன்னர் யான் தமிழ் நூல்களை ஆசையாகப் படித்ததில்லை. ஆங்கிலக் கல்வியில் ஆழ்ந்திருந்ததாலும், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் ஆர்வமிக்கிருந்ததாலும் தமிழை நன்கு படிக்கும் வாய்ப்பு கிடைக்கவே இல்லை.

பாரதியாரைப் படிக்கும் போது அவரது சுயசரிதையைக் கூறும் பாடல்கள் எனது உள்ளத்தைத் தொட்டன; அவை எனது வாழ்க்கையையும் போக்கையும் மாற்றி விட்டன என்று சொன்னாலும் பொருந்தும். இக்கால ஆங்கிலக் கல்வியைக் கற்போரைப் பற்றிக் கூறும்,

**"கணிதம் பன்னிரண் டாண்டு பயில்வர், பின்**
**கார்கொள் வானிலோர் மீனிலை தேர்ந்திலார்;**
**அணிசெய் காவிய மாயிரங் கற்கினும்**
**ஆழ்ந்தி ருக்கும் கவியுளம் காண்கிலார்;**

வினைக ளும்பொரு ளாலும் பிதற்றுவார்;
வாழு நாட்டிற் பொருள் கெடல் கேட்டிலார்;
துணியு மாயிரஞ் சாத்திர நாமங்கள்
சொல்லு வாரெட் டுணைப்பயன் கண்டிலார் ”

என்ற கவிதை யான் பெற்ற கல்வியைப் பற்றி நினைக்கும்படி செய்தது. சிந்தித்துப் பார்த்தேன். செலவு செய்த பணத்தையும், காலத்தையும் நோக்க, யான் அடைந்த அறிவு மிகக் குறைவாகவே இருந்ததைக் கண்டேன். ஆங்கிலம் பயில்வதற்குச் செலவழித்த காலத்தைத் தமிழுக்குச் செலவு செய்திருப்பேனேயானால், எவ்வளவோ புலமையை அடைந்திருக்கலாம் என எண்ணினேன். ஆசிரியர் பணியில் இருந்து கொண்டே தமிழ் நூல்களைப் பயிலலாம் என்ற அமைதி கொண்டேன். பாரதியாரின்

'கம்ப னென்றொரு மானிடன் வாழ்ந்ததும்,
காளி தாசன் கவிதைபு னைந்ததும்,
உம்பர் வானத்துக் கோளையு மீனையு
மோர்ந்த ளந்ததோர் பாஸ்கரன் மாட்சியும்,
நம்ப ருந்திற லோடொரு பாணினி
ஞால மீதில் லக்கணங் கண்டதும்,
இம்பர் வாழ்வி னிறுதிகண் டுண்மையின்
இயல்பு ணர்த்திய சங்கர னேற்றமும்,

சேரன் தம்பி சிலம்பை யிசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்,
பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
பார ளித்ததும் தர்மம் வளர்ந்ததும்,

பேர ருட்சுடர் வாள்கொண் டசோகனார்
  பிழை படாது புவித்தலங் காத்ததும்
வீரர் வாழ்ந்த மிலேச்சர்தந் தீயகோல்
  வீழ்த்தி வென்ற சிவாஜியின் வெற்றியும்,

அன்ன யாவும றிந்திலர் பாரதத்
  தாங்கி லம்பயில் பள்ளியுட் போகுநர்”

என்ற பாக்கள் என்னைத் தமிழ்ப் படிக்கத் தூண்டின. கடந்த எழாண்டுகளாகவே, ஒழிந்த நேரங்களில், யான் தமிழ் இலக்கியங்களை முறையாகப் படித்து வருகிறேன்.

காவியப் போக்கிலும் கருத்து வளத்திலும் கம்பன் எனது மனதைக் கவர்ந்ததுபோல் வேறு யாரும் கவரவில்லை. இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் இராஜ நடையில் கம்பீரமாகச் செல்லுவதை அறிந்தேன். “நவில் தொறும் நூல் நயம்போலும்” என்ற உண்மையை வள்ளுவனிடத்தில்தான் காணமுடிந்தது. ஓதற்கெளிதாயும் உணர்தற்கரிதாயுமிருப்பதை திருக்குறளில் தான் கண்டேன்.

பிற்காலத்து இலக்கியங்கள் உயர்வு நவிற்சியணிகள் செறிந்து சிந்தனைக்கு விருந்தாக இருந்தன. பிறகு சங்க இலக்கியங்கள்மீது எனது நாட்டம் சென்றது. தமிழ்மொழியின் உண்மை இயல்பையும், அதன் பெருமையையும், பழந்தமிழர்களின் சீரிய வாழ்க்கை முறைகளையும், சங்க இலக்கியங்களில்தாம் காண முடியும். சீரிய தமிழ்த்தாய் எழில்களெல்லாம் திரண்டிருக்கும் மங்கைப் பருவத்துடன், ஒரு அரசிளங் குமரிபோல், அரியாசனத்தில் திருவோலக்கம் கொண்டிருக்கும் காட்சியைச் சங்கஇலக்கியங்களில்தாம் பார்க்கலாம். சங்க இலக்கியங்களைப் பயின்று வருவதில் உள்ள இடர்ப்பாடுகள் ஆசிரியர் துணையின்றிப் பயில்வார்க்குத்

தாம் தெரியும். சில பாக்களைப் பயின்று அவற்றின் நுட்பங்களையும் உள்ளுறைப் பொருள்களையும் திருப்தியாக அறிந்துகொள்வதற்குப் பல மணி நேரம் செலவு செய்திருக்கிறேன். பலாப் பழத்தை உரித்து அவற்றின் சுளைகளை எடுப்பதுபோன்ற சிரமம் இருந்தாலும், ஒவ்வொரு பாடலும் ஒரு படித் தேனாகவே இனித்ததை அறிந்தேன். பாக்களைப் படித்துப் பொருள் உணர்வதில் உள்ள சங்கடங்களை எண்ணிப் பார்த்தால், தமிழ் இலக்கியத்தைக் கண்டு மக்கள் 'தென்னலிராமன் பூனை' போன்று மிரளுவதன் உண்மையைத் தெரிந்தேன். புலி பயத்தைவிடக் கிலி பயந்தான் பெரும்பாலோரை மிரளும்படி செய்கிறது என்பதையும் அறிந்தேன்.

பொதுவாக இலக்கியத்தில் ஒரு சுவையையும் சிறப்பாகச் சங்க இலக்கியத்தில் ஒரு விருப்பத்தையும் ஊட்டிவிட்டால் எவரும் அவற்றை விரும்பிப் படிப்பார்கள் என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. அந்த எண்ணமே இந்த நூல் தோன்றக் காரணம். பொதுவாகச் சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாம் நயமாகத் தான் இருக்கின்றன. யான் படித்து அனுபவிக்கும் பாக்களில் சிலவற்றை அவ்வப்போது சிறு சிறு கட்டுரைகளாக எழுதிப்போட்டிருந்தேன். ஒழிந்த நேரங்களில் எனது சோதர ஆசிரியர்களுக்கு அவற்றைப் படித்துக்காட்டுவதுண்டு; எல்லோருமே அவற்றை நன்கு அனுபவித்தார்கள் என்றே சொல்ல வேண்டும். பத்திரிகைக்கு அனுப்பினால் பலருக்கும் பயனாக இருக்கும் என்று கூறினார்கள். அவ்வாறே யான் "காலச்சக்கர"த்திற்கு அனுப்பிவைத்தேன். இந்நூலில் உள்ள கட்டுரைகளில் பத்துக் கட்டுரைகள் காலச்சக்கரத்தில் வெளிவந்தவை.

தமிழ் இலக்கியப் பூப்பு விரிந்து கிடப்பதற்கேற்ப, தமிழில் இலக்கியத்திறன் ஆய்வு (Literary Criticism) நூல்களே இல்லை எனலாம். ஆங்கில இலக்கிய நூல்களைப் படிப்போர் உல

கில் பெருகுவதற்குக் காரணம் அம்மொழியில் அபரிமிதமாகத் தோன்றும் திறன் ஆய்வு நூல்களே. இத்துறையில் புதிய நூல்கள் அதிகம் தோன்றினால், தமிழ் இலக்கிய நூல்களைப் பயில்வோரின் தொகையும் அதிகமாகும் என்ற திடமான நம்பிக்கை எனக்கு உண்டு. ஆங்கிலம் அறிந்த தமிழறிஞர்கள் இத்துறையில் ஆக்க வேலை செய்தால், தமிழ் மொழி வளம் அடைந்து, மங்கல வாழ்வைத் துறந்திருக்கும் தமிழ்த்தாய் பண்டுபோல் பேரழகு வாய்ந்தவளாக விளங்குவாள் என்பதற்கையமில்லை. இந்நூல் ஓரளவு இத்துறையில் தொண்டு செய்யும் என்னும் நம்பிக்கை உடையேன். படிப்போர்க்கு இலக்கிய உணர்வைத் தரும் என்ற உறுதியும் எனக்கு உண்டு.

நான் எழுத்தாளர் உலகத்திற்குப் புதியவன். தக்க முன்னுரை உதவி என்னைப் பிறருக்கு அறிமுகம் செய்து வைத்த திருவாளர் **பி. ஸ்ரீ.** அவர்கட்கும், எனது நூலைப் பதிப்பிக்க முன் வந்த கலைவளர்ச்சிப் பதிப்பகத்தார்க்கும், உயர்ந்த முறையில் விரைவில் அச்சிட்டுத் தந்த ஐனோபகார அச்சகத்தார்க்கும் எனது உளமார்ந்த நன்றி.

**துறையூர்.**
14-1-49

**ந. சுப்பு ரெட்டியார்.**

# உள்ளுறை

# என்ன ஆச்சரியம்?

"இனிமேல் காலாகாலத்தில் வந்து சாப்பிடா விட்டால் உன்னை அடிப்பேன்."

"ஏன்?"

"ஏனு? காலையில்தான் குளித்தாய்; தலை சீவிக் கொண்டாய்; பூச்சூட்டிக் கொண்டாய். இப்போது பார்த்தால் ஒரே காட்டேரி மாதிரி இருக்கிறுயே. இனி மேல் கண்ட இடத்தில் போய் விளையாடு! பிறகு பேசிக் கொள்ளுகிறேன்."

இப்படியாக அன்னைக்கும் ஐந்து வயதுடைய அவளது மகளுக்கும் பேச்சு நடந்தது ஒரு நாள். அந்த சமயத்தில் செவிலித்தாய், ஒரு பொற்கலத்தில் பாற் சோறு கொண்டுவந்தாள் அச்சிறுமிக்கு ஊட்டுவதற்கு. நன்றாகக் காய்ச்சிய பாலில் சீரகச் சம்பா அரிசிச் சோறு கலந்த உணவு அது.

அவளுக்கும் கோபந்தான் தனது மகள் (வளர்ப்பு மகள்) காலத்தில் வந்து உண்ணவில்லையென்று. அவளை மிரட்டுவதற்காகக் கையில் பூப்போன்ற மெல்லிய நுனியையுடைய கோல் ஒன்றைக் கொண்டு வந்தாள்.

"இனிமேல் வந்து சாப்பிடாவிட்டால் அடிதான். இந்தா இதைச் சாப்பிடு" என்று அச்சிறுமியை அதட்டினுள் அவள் வளர்ப்பு அன்னை. அவள்தானு அதற்குப் பயப்படுபவள்? "வெடுக்" கென்று அன்னையின் கைகளிலிருந்து தப்பித்துக்கொண்டு ஓடினுள்.

ஓடிய காட்சியே இன்பத்தை அளித்தது தாய்மார்களுக்கு. செல்வத்திற்குக் குறைவில்லாததால் அவளுக்கு ஆடைகளுக்கும் அணிகலன்களுக்கும் குறைவில்லை. கண்ணுக்கினிய நல்ல மெல்லிய துணியால் தைக்கப்பட்ட பாவாடையையும் சட்டையையும் அணிந்திருந்தாள். கழுத்தில் மெல்லிய முத்துமாலையும், மெல்லிய தங்கச் சங்கிலியும் காட்சியளித்தன. காலில் பொற்சிலம்பு அணிந்திருந்தாள்; சிலம்பினுள் ஒளியையுடைய முத்துக்கள் பரல்களாக அமைந்திருந்தன. இத்தகைய அழகான உருவம் வளைந்து வளைந்து ஓடினுல் பார்ப்பவர்கள் யாருக்குத்தான் இன்பத்தை அளிக்காது?

சிறுமியின் ஓட்டத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்தாள் செவிலித்தாய். அவளுக்கும் வயது ஆய்விட்டது. தலையிலும் நரை தட்டிவிட்டது. கையில் பொற்கலத்தில் உணவை வைத்துக்கொண்டு அச்சிறுமியை ஓடிப்பிடிக்க முடியவில்லை. என்ருலும், சிறுமியின் ஓட்டத்தின் அழகை தனது கண்களால் பருகிக்கொண்டே தள்ளாடித் தள்ளாடி ஓடுகிருள் அவளைப் பிடிப்பதற்கு.

சிறுமிக்குத் தெரியும் நன்னை அன்னை பிடிக்க

முடியாதென்று. வீட்டிற்கு முன்னுலுள்ள பந்தல் வரையிலும் ஓடி அங்கு நின்றுகொண்டு "இதைச் சாப்பிடு" என்ற உத்திரவுக்குப் பதிலுத்தரமாக "நான் மாட்டேன்" என்று கூறுகிருள். இப்படிச் செல்வமாக வளர்க்கப்படுகிருள் அச்சிறுமி. அவள் அக்கம்பக்கத்து வீட்டுச் சிறு பெண்களுடன் சேர்ந்துகொண்டு மண்ணுல் செய்த பாவைக்குப் பூச்சூட்டிப் பெண்ணுகப் பாவித்து விளையாடுவாள். சில சமயம் ஆண் பிள்ளைகளுடன் கைகோத்து விளையாடுவதும் உண்டு. கண்ட பண்டங்களை வாங்கித்தரும்படி நச்சு செய்வதைச் சொல்ல முடியாது. வாங்கிக் கொடுக்காவிட்டால் தெரு முழுதும் கேட்கும்படி ஏங்கியழுவாள். மகிழ்ச்சி வந்தால் 'பத்து வீடுகள்' வரை கேட்கும்படி அடங்காச் சிரிப்பு சிரிப்பாள்.

ஆண்டுகள் பல செல்லுகின்றன. சிறுமியின் விளையாட்டுகளும் தொந்தரவுகளும் வரவரக் குறைகின்றன ; நாளடைவில் அவை 'பொய்களாய்ப் பழங் கதைகளாய்க் கனவுகளாய்ப்' போகின்றன. அவளுக்கு மணப்பருவமும் வருகிறது. ஒரு மகனுக்கு வாழ்க்கைப் பட்டு அவனேடு வசிக்க நேரிடலாம் என்ற கருத்தைப் புகட்டும் சொற்கள் அன்னையின் வாயிலிருந்து அடிக்கடிப் பிறக்கின்றன. விரைவில் அவளுக்குத் திருமணமும் முடிகிறது ; கணவன் வீட்டிற்கும் அனுப்பப்படுகிருள்.

அவளது மணளனே சிறந்த கல்விமானே ; பெரிய குடும்பத்தில் பிறந்தவன் ; குணசீலன். அவ

னுக்குக் கல்யாணம் ஆகும்போது ஏராளமான சொத்துக்கள் இருந்தன, ஊழ்வினைப்பயனுல், எல்லாச் செல்வத்தையும் இழக்க நேரிடுகிறது. அன்றுட வாழ்க்கைக்கே சம்பாதிக்க வேண்டிய நிலையும் வருகிறது. இப்படி எளிய வாழ்க்கை நடத்தும் நாட்களில், சில சமயம் இருவரது உணவிற்கும் போதிய வருவாய் வருவதில்லை. அந் நாட்களில் கணவனுக்கு உணவு அளித்து, எஞ்சியதைத் தான் உண்பாள்; இல்லாவிட்டால் பட்டினியாகவும் கிடப்பாள்.

இப்படியாக அவ்வள் எளிய வாழ்க்கை நடத்தும் செய்தி அவள் பிறந்த வீட்டுக்கு எட்டுகிறது. நற்றுயும் செவிலியும் மிக வருத்தம் அடைகிறுர்கள். பொதுவாக தாய்மார்கள்தாம் தம் மகள் விஷயத்தில் அதிகக் கவலை கொள்ளுவது உலக இயற்கை. ஒரு நாள் தனது மகளைப் பார்க்கச் செவிலித்தாய் வருகிருள்; சில நாட்கள் மகள் வீட்டில் தங்குகிருள். அன்றுட நிகழ்ச்சிகளை நேரில் காண்கிருள்; ஒரு சில நாட்கள் தனது மகள் பட்டினியாகவும் இருந்து வருவதைப் பார்க்க நேரிடுகிறது. எவ்வளவு செல்வத்தில் வளர்ந்தவள்? கணவனுக்குத்தான் சொத்து இல்லையா? அவையெல்லாம் இப்பொழுது எங்கே? என்ன செய்வது? விதியை யார்தான் வெல்ல முடியும்? இந்த எளிய நிலையில் வாழ்க்கையைச் சலிப்பின்றி நடத்த தனது மகள் எங்கு பழகிக்கொண்டாள்? எப்போது பழகினுள்? என்ன ஆச்சரியம் இது?...... என்றெல்லாம் செவிலித்தாய் எண்ணத் தொடங்குகிருள். தனது மகளது இல்வாழ்க்கை அவளுக்குப் பெரிய ஆச்சரியத்தை

உண்டாக்குகிறது. சில நாட்களில் தன் வீடு திரும்பு கிறாள். தான் நேரில் கண்டதை நற்றாய்க்குக் கூறு கிறாள். இந்நிகழ்ச்சிகள் அடங்கிய பாடல் வருமாறு:

"பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத் தொருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு புடைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம் பொலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்
பரிஇ மெலிந்தொழியப் பந்த ரோடி
ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந் தனள்கொல்?
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணும் சிறுமது கையளே"

நற்றிணை 110

[பிரசம் - தேன்; புடைப்பிற் சுற்றும் - மிரட்டுவதற்காக சுற்றும் ஓக்குபு - ஓச்சி; தத்துற்று - பாய்ந்து, அரிநரை - மெல்லியரை; பரீஇ - பற்றுவதற்கு, ஒழுக்கம் - ஆசாரம்; கொழுநன் - கணவன்; குடிவறன் - வறுமை; நுணங்கு அறல் - நுண்ணிய மணல் பொழுது மறுத்துண்ணும் - ஒருபொழுதின்றி ஒருபொழு துண்ணும்; மதுகை - வன்மை]

# பழங்கயிறு.

மலைச் சாரல்களில் அடிக்கடி யானைகளைக் கூட்டங்கூட்டமாகக் காணலாம். திருவாங்கூர் தனி அரசைச் சேர்ந்த எல்லைகளில் சுற்றினவர்களுக்கு இத் தகைய வாய்ப்புகள் நினைவுக்கு வரும். சிலசமயம் மதயானைகள் ஒன்ருேடொன்று போரிடும் காட்சிகளை யும் பார்க்கலாம்.

ஒரு அழகிய மலைச்சாரல்; ஒரு நாள் இரண்டு மத யானைகள் ஒன்ருேடொன்று போரிட்டு நிற்கின்றன. முதலில் அவை ஒன்ருேடொன்று மோதிக்கொள்கின் றன; பிறகு அருகாமையில் உள்ள மரங்களையொடித்து அவைகளை வீசிக்கொள்கின்றன. அவற்றின் அருகில் மொத்தமான கயிறு ஒன்று கிடக்கின்றது; எப்படியோ யானைகள் கயிற்றைத் தலைக்கு ஒரு நுனியாகப் பற்றிக் கொள்கின்றன; கயிற்றை இழுத்துப் போரிடுகின்றன. கயிருே தேய்ந்த பழங்கயிறு; யானைகளின் இழுப்பில் கயிறு அறுந்துபோக வேண்டியது தான்.

யானைகள் ஒவ்வொரு தடவை இழுக்கும் போதும் கயிற்றின் பிராணன் போய்க் கொண்டிருக் கின்றது; ஒவ்வொரு புரியாக அறுந்து கொண் டிருக்கிறது.

கவிஞன் ஒருவன் இந்தக் காட்சியைக் காண நேரிடுகின்றது. உலக வாழ்க்கையில் எத்தனையோ மனிதர்கள் இக் கயிற்றின் நிலையில் திண்டாடுவது கண் கூடு. அந் நிலையை எளிதில் அறியவல்ல இக் கவிஞன் தான் கண்ட காட்சியுடன் அந்நிலையைப் பொருந்த வைத்துப் பார்க்கிறான்.

புற உலகில் தான் கண்ட காட்சியை உவமான மாக வைத்து அக உலகில் ஒரு உயிர் ஓவியத்தை உண் டாக்குகிறான்.

உயிர் ஒன்று உடல் இரண்டாக வாழ்ந்த காதலர் களில், பொருள் சம்பாதிப்பதற்காகக் காதலன் காதலியை விட்டுச் சிலநாட்களே பிரிகிறான்.

மரமும் செடியும் காய்ந்து போன பாலைநிலத் தில், கடுமையான வெயிலில் அவன் தனிமையாகச் செல்லுகிறான்; சிந்தனை தேக்கிய முகத்துடன் நடந்து சென்று கொண்டிருக்கிறான்.

காட்டில் வெறும் உடல்தான் நடந்து செல்லு கிறது; உள்ளம் பூராவும் அவளிடத்தில் இருக்கிறது. சதா அவளது நினைவு தான்.

தன் மனதில் அவளது உருவத்தைக் காண் கிறான். புறக்கண்களால் அவ்வுருவத்தின் அழகை அனுபவிக்க முடியாவிட்டாலும், அவளது அழகு துளும்பும் உருவத்தை அவனது அகக்கண் அனுப வித்து நிற்கின்றது.

'மேகம் போன்ற கூந்தல் அழகுதான் என்ன! முதுகுப் புறத்தில் தாழ்ந்திருக்கும் நீண்டு இருண்ட கூந்தல்! அழகான கண்கள்; மையுண்டு மருண்டு பார்க்கும், உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கண்கள்! கண்விழிகளுக்கேற்ற இமைகள்; காதல் போதையை உண்டாக்குவதற்கு ஏற்ற வண்ணம் கொஞ்சம் திறந்திருக்கின்றன; மலரும் நிலையிலுள்ள ஒரு முகை போல சிறிது திறந்திருக்கின்றன. என்னே அவற்றின் பொலிவு!' இவ்வாறு அவன் நினைத்த வண்ணம் நடந்து செல்கிறான்.

என்ன செய்வான் பாவம்? அவளைப் பிரிந்து தனியாக இருக்கிறான் நிலவு காயும் இரவில்; நடுக் கானகத்தில். அவளைப் பிரிந்த நிலையில் பால்போல் சொரிந்து நிற்கும் வெண்மதியின் தண்ணிலவை அவனால் அனுபவிக்க முடிய வில்லை.

"ஏன் தனியாகச்சென்று அவதிப்படுகிறாய்? வா போவோம் நமது துன்பத்தைத் தீர்த்துக்கொள்ள" என அவனது உள்ளம் தூண்டுகிறது; கூட்டந்தான் உறுதிப் பொருள் எனக் கூறுகிறது அவனது உணர்வு நிலை.

சற்று நேரம் மெய்ம்மறந்து காதல் உலகில் பிரயாணம் செய்கிறான். தன்னை மறந்த நிலையில் இருப்பதால் அவனுக்கு ஒன்றுமே புலப்படவில்லை.

சிறிது நேரத்தில் அவன் சுயநிலைக்கு வருகிறான்; கடமையை உணர்கிறான். "சீ, என்ன மூடத்தனம்?

செய்வினை முடிப்பதற்குமுன் திரும்புதல் அறியாமை யன்றோ? திரும்பிச் சென்றால் கண்டோர் எள்ளி நகையாடுவர். சிறிது.காலம் பொறுத்திரு" என்று கூறுகிறது அவனது அறிவு நிலை.

இங்ஙனம் அவனது மனம் ஒரு போர்க்கள மாகிறது; அறிவு நிலைக்கும் உணர்வு நிலைக்கும் ஒரு பெரிய போராட்டம் நடைபெறுகிறது; கடமையும் காதலும் ஒன்றோடொன்று போரிட்டு நிற்கின்றன; இரண்டிற்கும் இடைப்பட்ட செயல்நிலை படாதபாடு படுகின்றது.

'யானையின் இடையே அகப்பட்டுக்கொண்டு சிறிது சிறிதாக, ஒவ்வொரு புரியாக, அறுந்துபடும் கயிறுபோல, எனது உடல் கடமை உணர்வுக்கும் காதல் உணர்வுக்கும் இடையே சிக்கிக் கொண்டு தின் டாடுகிறது' என்கிறான்.

இக் கருத்துக்களை அடக்கி, தலைவன் கூற்றாக, கவிஞன் உண்டாக்கிய பாட்டு.

புறந்தாழ் பிருண்ட கூந்தற் போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்
உள்ளம் பிணிகொண் டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வாம் என்னும்;
செய்வினை முடியா தெவ்வஞ் செய்தல்
எய்யா மையோ டிழிவுதலைத் தருமென
உறுதி தூக்கத் தூங்கி அறிவே
சிறிதுநனி விரையல் என்னும்; ஆயிடை
ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய
தேய்புரிப் பழங்கயிறு போல
வீவது கொல்லென் வருந்திய வுடம்பே"

— நற்றிணை 284

**[புறம் - பின்புறம்; தாழ்பு - தாழ்ந்து; செல்லல் - துன்பம்; எய்யாமை - அறியாமை; இழிவு - இகழ்ச்சி; விரையல் - விரையாதே; மருப்பு - யானைக்கொம்பு; வீவது - அழிவது.]**

*    *    *    *

இந்த அரிய கவிதை அக்காலத்தில் உள்ள புலவர்களின் மனதைக் கவர்கிறது; அவர்கள் நெஞ்சத்தை அள்ளுகிறது. கவிதை வெளிப்பட்ட நாள் முதல் கவிஞனை அவர்கள் பெயர் சொல்லி அழைப்பதில்லை. அவனைக் காணும்போதெல்லாம் தேய்புரி பழங்கயிறு தான் அவர்கள் நினைவுக்கு வருகிறது. ஆதலால் அவர்கள் கவிஞனைத் "தேய்புரி பழங்கயிற்றினார்" என்றே அழைக்கத் தலைப்பட்டனர்.

# சிறைப்பட்ட உள்ளம்

காணும் காட்சிகளைக் கவிதைகளில் பாய்ச்சி அலங்கரித்தார்கள் அன்றைய தமிழ்க் .கவிஞர்கள். சங்ககால இலக்கியங்களைப் படித்து அனுபவிப்பவர்கள் இத்தகைய இயற்கைக் காட்சிகளைக் கொண்ட பாடல்களைப் பார்க்கலாம்.

தமிழ்க்கவிஞர் ஒருவர் குன்றவாணர்கள் வாழும் மலை நாட்டு வழியே பிரயாணம் செய்ய நேர்கிறது. இயற்கை வனப்புகளை அனுபவித்துச் சென்றவர், சில நிகழ்ச்சிகளையும் காண்கிறார்.

இன்று தெருவில் காட்டப்படும் கயிற்றின்மீது நடக்கும் வித்தை அன்றும் நடைபெற்று வந்தது. இன்றும் பேர்போன சர்க்கஸ் கம்பெனியார் இத்தகைய வித்தைகளைக் காட்டி வருகின்றனர்.

நாகரீகம் வளர வளர சாதாரண நிகழ்ச்சிகளும் கலைகளாக மாறிவிடும். இளமையில் குழந்தைகளிடமும் சிறுவர்களிடமும் அரும்பும் விளையாட்டுணர்வுகள்தாம் நாளடைவில் இன்று நாம் காணும் நாடகக்கலை, நாட்டியக்கலை - ஆகிய கலைகளாக வளர்ந்து விட்டன என்று உள நூல்வல்லுநர் கூறுகிறார்கள்.

அன்றும் கயிற்றில் நடக்கும் வித்தை நடப்பதுடன் நின்றுவிடவில்லை. இன்று சர்க்கஸ் கம்பெனிகளில் காட்டப்பெறும் கயிற்று நடனம் (rope dance) போல் அன்றும் நடைபெற்று வந்தது; சங்க இலக்கியங்களில் இதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

சாதாரணமாகக் கயிற்று நடனம் நடைபெறுங்கால் இசைக்கருவிகள் ஒலிக்கும். ஆடும் பெண் கண்ணையும் கருத்தையும் நாட்டியத்திலும் பாட்டிலும் செலுத்திக் கவனமாக ஆடுவாள். இம்மாதிரியான அபூர்வக் காட்சிகள் நடைபெறுங்கால் இமை கொட்டாது மக்கள் சிலைபோல் இருப்பார்கள்; காட்சிகளை அனுபவித்த வண்ணம் இருப்பார்கள். கடைசியில் " சபாஷ் " போட்டுக் கைகொட்டுவார்கள்.

கவிஞர் மலைநாட்டு வழியே போய்க்கொண்டிருக்கும் போது ஒரு தோப்பில் இத்தகைய கயிற்று நடனம் ஒன்று நடைபெறுகிறது. கவிஞரும் ஆட்டத்தைப் பார்க்கிறார்; அனுபவிக்கிறார். ஆட்டம் முடிவடைகிறது; கூட்டமும் கலைகிறது. ஆட்டக்காரர்கள் கயிற்றை அவிழ்க்காது உணவுண்ணச் செல்கிறார்கள். கவிஞரும் பசி ஆற்றிக்கொள்ளப் பக்கத்திலுள்ள அருவிக்குச் செல்கிறார்.

அந்தத் தோப்பில் குரங்குகள் ஏராளம். அத்திப் பழம் போன்ற முகத்தையும் பஞ்சு போன்ற தலையையும் உடைய குரங்குக்குட்டி ஒன்று கயிற்றின்மீது ஏறுகிறது; கயிற்றின் வழியாக நடக்கவும் ஆரம்பிக்கிறது. கிளைகளில் எளிதாகச் செல்லுவது போல,

கயிற்றின்மீது எளிதாகச் செல்ல முடியவில்லை. இப்படியும் அப்படியும் ஆடுகிறது; தத்தளித்து நடக்கிறது.

தோப்பிற்கருகாமையில் உள்ள ஒரு பாறையின் மீதிருந்த குன்றவாணச் சிறுவர்கள் இந்தக் குட்டியின் செயலைப் பார்க்கிறார்கள்; சற்று நேரத்திற்கு முன்னர் நடைபெற்ற கயிற்று நடனத்தைப் பார்த்தவர்கள் அவர்கள். பெண் ஆடினது போல் குரங்குக்குட்டியும் ஆடுகிறது என்று எண்ணி, அது அசையும்போதெல்லாம், அந்த அசைவுகளுக்கேற்றபடி கைகொட்டித் தாளம் போடுகிறார்கள்.

அருவியில் பசியாற்றிக் கொண்டிருக்கும் கவிஞர் இக்காட்சியையும் காண்கிறார்; அதை அனுபவிக்கிறார். அந்நிகழ்ச்சி அவரது நெஞ்சில் பதிவு பெறுகிறது.



இயற்கைப் புணர்ச்சி நடைபெற்ற நாள்முதல் அவன் அவள் நினைவாகவே இருக்கிறான். அந்த நாள் முதல் அவன் கற்ற கல்வியறிவும் அவனிடம் வளர்ந்த இயற்கை அறிவும் அவனுக்குத் துணையாக நிற்கவில்லை. காதல் உணர்வு அவற்றையெல்லாம் கவித்து விடுகிறது சதா எதையோ நினைத்த வண்ணம் இருக்கிறான்.

அவனது ஆருயிர் நண்பன் அவனிடம் என்றும் பார்க்காத மாறுதல்களைக் காண்கிறான்; கவலை கொள்

கிறன். குடும்பக்கவலைகளால் ஒருக்கால் துயரப் படலாம் என எண்ணுகிறன். அவனைக் கேட்டுப் பார்த்ததில் அப்படி ஒன்றும் இருக்கிறதாகத் தெரிய வில்லை. எப்படியாவது கேட்டுத் தெரிந்து, முடிந்தால் உதவி செய்யலாம் என்ற நோக்கத்துடன், தொந்தரவு பண்ணிக் கேட்கிறன்.

"என்ன ஒரு மாதிரியாக இருக்கிறயே? பேசி னலும் பேசமாட்டேன் என்கிறய்?"

"ஒன்றுமில்லை"

"ஒன்றுமில்லையா? அப்படி ஒன்றுமில்லாவிட் டால் இப்படி ஊமையாக இருப்பானேன்?"

"அதோ ஒரு ஊர் தெரிகிறதல்லவா?"

"ஆம் தெரிகிறது. அதற்கென்ன?"

"அந்த ஊரில் உள்ள குன்றவாணரின் மகள் ஒருத்தி என் நெஞ்சைக் கொள்ளை கொண்டு விட்டாள்; அவளிடம் எனது உள்ளம் சிறைப்பட்டிருக்கிறது. அவள் அதை விடுவித்தால்தான் உண்டு; பிறரால் அதை விடுவிக்க முடியாது."

   

கவிஞர் தான் கண்ட காட்சிகளை இந்த நிகழ்ச்சி களுடன் குழைத்து ஒரு அழகான சொற்படம் தருகிறர்.

கழைபா டிரங்கப் பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
அதவத் தீங்கனி யன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
கழைக்க ணிரும்பொறை யேறிவிசைத் தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்அக்
குன்றகத் ததுவே; கொழுமிளைச் சீறூர்
சீறூ ரோளே நாறுமயிர்க் கொடிச்சி;
கொடிச்சி கையகத் ததுவே; பிறர்
விடுத்தற் காகா பிணித்ததுஎன் நெஞ்சே"
— நற்றிணை, 95

[கழை - குழல் வாத்தியம்: பல்லியம் . பல வாத்தியங்கள்; கறங்க - ஒலிக்க; கொடும்புரி - முறுக்குண்ட புரி; துய்த்தலை - பஞ்சுபோன்ற தலை; துய் - பஞ்சு வன்பறழ் - வலிய குட்டி; குறக்குறுமாக்கள் - குறவரின் சிறுவர்கள்; நாறுமயிர் - நறுமணங்கமழும் கூந்தல்; கொடிச்சி - மலை நாட்டுப் பெண்; பிணித்த- பிணிப்புண்ட]

பாடல் பாடினவர் அம்பலவனார் என்ற சங்ககாலப் புலவர். பாட்டைப் படித்துச் சுவைத்த அக்கால மக்கள் குரங்குக் குட்டியின் ஆட்டத்திற்குத் தக்குந்தாற்போல தாளங் கொட்டிய குன்றவாணச் சிறுவர்களை மறக்கவில்லை; 'கொட்டிய செயல்' அவர் நெஞ்சை விட்டு அகல வில்லை; 'கொட்டு என்ற சொல் அவர் உள்ளத்தைப் பிணித்து நின்றது. ஆகவே, அவர்கள் இப்பாடல் பாடிய சங்கப்புலவரைக் 'கொட்டம் பலவனார்' என்ற பெயரால் அழைத்து வரலாயினர்.

# ஊர் அடங்கிற்று!

அது பாண்டி நாட்டிலுள்ள கடற்கரைப் பிர தேசம். இப்போது திருப்புல் அணைக்கு (திருப்புல் லாணி அல்லது தருப்பசயனம்) அருகிலுள்ளது. அங்கு ஒரு சிறிய ஊர். அவன் அவ்வூரைச் சேர்ந்தவன்; நெய்தல்நிலத் தலைவன்.

நெய்தல்நில மக்களைப் பரதவர் என்று சொல்லு வது வழக்கம். மீன் பிடித்து அதனால் வரும் வருவாயைக் கொண்டு வாழ்க்கை நடத்துபவர்கள். வளைந்த சிறு படகுகளில் ஏறிக்கொண்டு அதிகாலையில் மீன் பிடிக்கச் செல்வார்கள். அவர்களது சேரியில் சதா மீன் நாற்றம் வீசிய வண்ண மிருக்கும்.

மீன் வேட்டைப் பலித்து விட்டால் அவர்களுக்கு உண்டாகும் மகிழ்ச்சியைச் சொல்லமுடியாது. குறுகிய கண்களையுடைய தங்களது வலையைப் பாராட்டுவார் கள். கொண்டு வந்த அயிலை மீனைச் சேரியிலுள்ள மற்றவர்களுக்கும் பகுத்துக் கொடுத்து ஆனந்தம் அடைவார்கள்.

அவளும் நெய்தல்நிலத்தைச் சேர்ந்த ஓர் ஊரிலுள்ளவள்; நல்ல அழகு வாய்ந்தவள்.

அவள்து ஊருக்கு அருகில் உள்ள கடற்கரையில் புலிநகம் போன்ற பொன்னிறமுள்ள கொன்றை மலர்கள் ஏராளமாக இருந்தன. அங்குள்ள புன்னை மரங்களிலும் ஏராளமான பூக்கள் பூத்திருந்தன. கொன்றைப் பூக்கள் தாமாக உதிர்ந்து கிடக்கும்; அவற்றின் மீது புன்னை மலர்களும் உதிர்ந்து ஓவியம் வரைந்தது போல மணல் தரையை அழகு படுத்தி விளங்கும். அங்ஙனம் அழகாக இருந்தது அக் கடற்கரைச் சோலை.

கடற்கரைக்கு அருகாமையில் உள்ள வயல்களில் நெய்தல் மலர்களுக்குக் குறைவில்லை. புன்னை மலர்களும் கொன்றை மலர்களும் கடற்கரை வெளிகளில் உதிர்ந்து கிடக்கும் காட்சி வயலிலுள்ள நெய்தல் மலர்களைக் கடலினுள் போகாதவாறு தடுப்பதற்கு அணைபோட்டதுபோல் இருந்தது.

திருவிழாக்காலங்களிலும், ஏனைய விசேஷ நாட்களிலும் ஊரிலுள்ள இளமங்கையர் நெய்தல் மலர்களைக் கொய்துத் தங்களது தழை ஆடையை அழகு படுத்துவதற்காக அந்த இடங்களுக்கு வருவதுண்டு. மலர்களைப் பறித்துக்கொண்டு அக்கடற்கரைப் பக்கங்களிலுள்ள சோலையில் விளையாடிச் சிறிது நேரத்தை அங்குப் போக்குவார்கள்.

ஒரு நாள் அவள் அச்சோலைக்கு வந்தாள்; அன்று அதிக நேரம் தங்கி விளையாடிக் கொண்டிருந்தாள். தோழிகள் எல்லோரும் விளையாடிக்கொண்டிருந்

தார்கள். ஒரு சமயம் அவள் அவர்களைப் பிரிந்திருக்கும் வாய்ப்பு வந்தது. தெய்வத் திருவருளால் அவன் அவளைத் தனிமையாகச் சந்தித்தான். எழிலும் உருவும் திருவும் பொருந்திய அந்த மடமங்கைக்கு ஏற்ற நாயகன்தான் அவன்; அழகுடையவன்; வீர முடையவன்; செல்வமுடையவன்.

அவனும் அவளை விரும்பினான்; அவளும் அவன் மீது காதல்கொண்டாள். இருவருக்கும் காதல் மணம் நடைபெற்றது. அன்று முதல் அவன் அந்த இடத் திற்கு அடிக்கடி வருவதும் போவதுமாக இருந்தான்.

காதல் விஷயங்களில் ஏற்படும் தொல்லைகளையும் அல்லல்களையும் காதலர்கள்தாம் நன்றாக உணர முடியும். இந்த இடையூறுகளை எல்லாம் எளிதில் நீக்கி அவளுக்கு உதவி புரிந்தாள் அவளது இன்னுயிர்ப் பாங்கி. அவனும் தன் செயலுக்குத் தக்கவள் அவளே என்று தேர்ந்தெடுத்தான்.

கெட்டிக்காரன் குட்டு எட்டு நாட்களில் வெளிப் படும் என்பது யாவரும் அறிந்த ஓர் உண்மை. எப் படியோ இக்களவு முறை ஒருவருக்குத் தெரிய அது ஊர் முழுவதும் பரவி விட்டது; ஒரே அலர். எங்கு பார்த்தாலும் இதே பேச்சுதான். ஒவ்வொருவரும் அவரவர்களுக்குத் தோன்றியவாறெல்லாம் பேசலானார் கள்.

சாதாரணமாக மக்களில் சிலர் வெறும் வாயை

மென்று கொண்டிருப்பார்கள், பிறரைப்பற்றி ஏதாவது பேசாவிட்டால் இவர்களுக்குப் பொழுதே போவதில்லை. இப்படிப்பட்டவர்களுக்குக் கொஞ்சம் அவல் கிடைத்தமாதிரி ஏதாவது விஷயம் கொஞ்சம் கிடைத்தாலும் போதும். அதுவும் காதல் விஷயத்தைப் பற்றிய சமாச்சாரம் என்றால் சொல்லவேண்டியதில்லை. ஈறு பேனாகி, பேன் பெருமாளாகி விட்டது போன்ற கதையாகிவிடும்.

அவளது களவு ஒழுக்கம் அவளது பெற்றோர்களுக்கும் எட்டிவிட்டது. அவளுக்குப் பலமான காவல்கள் வைக்கப்பட்டன. இதுவரையிலும் தனது இன்னுயிர்த் தோழியுடனும் ஏனைய பாங்கிமார்களுடனும் பூப்பறிக்க வயலுக்குச் செல்வாள்; அருவியாடிவரச் சுனைக்குப் போவாள்; பொழிலாடச் சோலைக்குச் செல்வாள். இப்போதோ ஒரே ‘கெடுபிடி’; பலமான ‘இற்செறிப்பு’. அவளால் வெளியில் செல்ல முடியவில்லை. சதா மனம் புழுங்கிச் சோர்வு அடைவாள். இவளை எதிர்பார்த்து அடிக்கடி சோலைக்கு வந்து ஏமாற்றமடைந்து திரும்பும் அவனது நிலையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

இன்னொரு தொல்லையும் அவளுக்கு வந்து சேர்ந்தது. ஊரார் அலரைக்கேட்ட பெற்றோர்கள் அவளது திருமணப் பேச்சைத் தொடங்கிவிட்டார்கள். தினந்தோறும் வீட்டில் கல்யாணப் பேச்சுதான். எப்படியாவது விரைவில் திருமணத்தை முடித்துவிட வேண்டுமென்று அவளது பெற்றோர்கள் உறுதி

கொண்டார்கள். எங்கெங்கோ வரன் பார்த்தார்கள். பல மாப்பிள்ளைகள் வருவதும் போவதுமாக இருந்தார்கள். அவர்களில் ஒருவர்கூட அவளுக்குப் பிடித்தவராக இல்லை. அவளது உள்ளத்தைக் கொள்ளை கொண்டவனிருக்க பிறர்மேல் எங்ஙனம் மனம் நாடும்?

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் எல்லாம் தோழிக்குத்தான் அதிகப் பொறுப்பு. சில சமயம் அறத்தொடு நிற்பாள். தலைவி இன்ன தலைவனுடன் நட்புக் கொண்டிருக்கிறாள் என்ற உண்மையை நேரிய முகமாகவோ மறைமுகமாகவோ அவளது பெற்றோர்களுக்குக் கூறி அத்தலைவியின் கற்புக்குச் சார்பாக நிற்றலை அகப்பொருள் நூலார் 'அறத்தொடு நிற்றல்' என்று கூறுவார்கள். தலைவியின் நிலையையும் அவள் இருக்கும் சூழ் நிலைகளையும் சரியாக உணராது தனது களவொழுக்கம் ஒன்றையே குறியாகக் கொண்டு ஒழுகும் தலைவனுக்குப் பலவிதமாகத் தலைவியின் நிலையை எடுத்துக்கூறுவாள்; பகலிலும் இரவிலும் அவளுடன் வரும் அவனுக்கு சிலசமயம் குறிகளை நேர்ந்தும் சிலசமயம் குறிகளை மறுத்தும் அனுப்பி விடுவாள். சிலசமயம் நேர்வாள்போல் கூறி, அதன் அருமையை உணர்த்தி, வரைவு கடாவுவாள்; பலர் அறியும்படி தலைவியை மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்று தலைவனுக்கு அடிக்கடி கூறி அவனைக் 'கற்பு மணத்துக்கு' இணங்கச் செய்வாள்.

இப்போது தோழி அவனைத் திருமணத்துக்கு இணங்கச் செய்துவிட்டாள். "அவர் கல்யாணம்

செய்துகொள்ள ஒப்புக்கொண்டு விட்டார்" என்ற நற்செய்தியை அவளுக்கும் அறிவித்தாள்.

அவளது காதல் ஒழுக்கத்தைப்பற்றி ஊரார் பலவிதமாகப் பேசிக்கொள்ளுகிருர்களே என்று இது காறும் தோழி வருந்திக்கொண்டிருந்தாள்; அவளும் வீட்டுக்குள்ளேயே யிருந்து கொண்டு மனம் குமுறிக் கொண்டிருந்தாள்.

"ஊர் வாய்ககு உலைமூடி போட்டாய்விட்டது" என்ற செய்தியை மிக ஆர்வத்துடனும் பெருமிதத்துடனும் அவளுக்கு அறிவித்தாள்.

இச்செய்தியை ஒரு வரலாற்றை உவமையாகக் கொண்டு அவளுக்குத் தெரிவிக்கிருள் தோழி.

"இராமர் சீதையை மீட்கும் பொருட்டு இலங்கைக்குச் செல்லும்போது தனக்குத் துணையாக வந்த சுக்கிரீவன், அனுமான் முதலியோருடன் ஒரு ஆலமரத்தின் அடியில் தங்கி அரிய வேதங்களை ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்போது அம்மரத்தின் மீதிருந்த பறவைக் கூட்டங்கள் ஒலித்து அவருக்குத்தொந்தரவை உண்டாக்கின. இராமர் தனது ஆணையால் அவ்வொலியை அடக்கினுர். அதுபோலவே அவர்களது திருமணத்தால் ஊராரது 'தூற்றல் பேச்சும்' அடங்கி விட்டது"

என்று உணர்த்துகிருள்.

தோழியின் பேச்சில் சில அடிப்படையான

கருத்துக்கள் இருக்கின்றன. மேற்கருத்துக்கள் உட் கருத்துக்களுக்கு உவமைகளாகவிருந்து அவளது பேச்சை நயமாக்குகின்றன.

பரதவர் தமது முயற்சியால் மீன்களைப் பிடித் தது அவன் அவளை அடைந்ததற்கு உவமையாகும். மீன் பிடிப்பதற்கு வலை கருவியாக அமைந்தது அவன் அவளை அடையத்தோழி கருவியாக இருந்ததைப் புலப் படுத்துகிறது. பரதவர் தாம் பிடித்த மீன்களை ஊரார் எல்லோருக்கும் பகுத்துக் கொடுத்தது அவன் அவளை அவளது சுற்றத்தினின்றும் கொண்டுபோய் தனது ஊரில் அவளைக்கொண்டு விருந்தினால் தனது ஊரை யெல்லாம் மகிழ்விப்பதைக் குறிக்கின்றது.

அன்றியும், நெய்தற்பூ வயலில் தனியாக வளர்ந் திருப்பது, அவள் வீட்டில் தனியாக வளர்ந்ததைத் தெரிவிக்கிறது. புன்னைப்பூவும் கொன்றை மலரும் கடற்கரையில் உதிர்ந்து கிடப்பது, அவளது பெற்றோர் களும் தோழியர்களும் அவளுக்குக் காவலாக அமைந் ததைக் குறிக்கின்றன. தனியாகத் தருக்கி வளர்ந்த நெய்தல் மலர் மகளிர்க்குத் தழை யாடையை அலங்கரிக் கப் பயன்பட்டது, செல்வத்தால் வளர்ந்த அவளும் அவளது இல்லத்திற்குத் துணையாகப் போனதை உணர்த்துகிறது.

இக்கருத்துக்களை அடக்கித் தோழியின் கூற்றாக வரும் பாட்டு

கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
இரும்புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்கண் அவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்கண் அயிலை பகுக்குந் துறைவன்
நம்மொடு புணர்ந்த கேண்மை, முன்னே
அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப்
பலரும்ஆங் கறிந்தனர்; மன்னே; இனியே.
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும்
கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்
வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றுஇவ் அழுங்கல் ஊரே''

அகநானூறு, 70

[ கொடு - வளைந்த; திமில் - படகு; வேட்டம் - வேட்டை; இரும்புலா - பெரிய புலால் நாற்றம்; அயிலை - அயிலை மீன்; கேண்மை - காதல் நட்பு; அம்பல் - அதிகம் பரவாத அலர்; மன்னே - அது கழிந்தது; வதுவை - திருமணம்; ஞாழல் - கொன்றை; வரிக்கும் - அழகு செய்யும்; கழனி - வயல்; கலித்த - தழைத்த; கவுரியர் - பாண்டியர்; தொல் முது கோடி - மிக்க பழமை யுடைய திரு அணைக்கரை (சேது); அவித்த - ஒலியை அடக்கின; அழுங்கல் - ஆரவாரம் ]

# பெரிய ஆர்ப்பாட்டம்

அது பாண்டி நாடு; நெடுஞ்செழியன் ஆட்சி புரிந்த காலம். நெடுஞ்செழியன் சிறியவனாக இருக்கும்போது அவன் தந்தை அவனைக் கைவிட்டு விண்ணுடு சென்று விட்டான். ஆதலால் நெடுஞ்செழியன் இளமையிலேயே அரசுகட்டில் ஏறுதல் இன்றியமையாததாயிற்று. இவன் ஆட்சி புரிந்து வரும் நாளில், 'சிறு பயல்தானே, இவனை எளிதில் வென்று விடலாம்' என்று நினைத்து இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்ற சோழ அரசனும், சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை என்ற சேர அரசனும், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்ற வேளிர்கள் ஐவரும் பாண்டி நாட்டை முற்றுகையிட்டார்கள்.

யானைகளால் சூழப்பட்ட ஆண் சிங்கம் போல் மிகக் கோபத்துடன் கிளம்பினுன் நெடுஞ்செழியன்; உழிஞைப் பூமாலையை அணிந்து சென்றுன். மிகவும் சிறியவனாக இருந்தாலும் சிறிதும் அஞ்சாமல் கடும் போர் புரிந்து அந்த ஏழரசர்களையும் புறங்காட்டி ஓடச் செய்தான். ஏழரசர்களும் ஓடிச்சென்று சோழ நாட்டில் புகுந்தார்கள். ஆனுல் நெடுஞ்செழியன் அவர்களை அத்துடன் விட்டானில்லை; அவர்களை விடாது பின்

தொடர்ந்து, அவர்களைத் தலையாலங்கானம் என்ற இடத்தில் மறித்துக்கொண்டு மீண்டும் ஒரு பெரும் போர் நடத்தி அதிலும் வெற்றி பெற்றான். அத்துடனும் நில்லாது பகைவர்களை அவர்கள் தலைநகர் வரை போர்ப்பறை யொலிப்பத் துரத்திச் சென்று அவர்கள் உரிமை மகளிர் நாணமுற்று உயிர்துறக்குமாறு அவர்களைக் கொன்றான். அதுமுதல் அவனுக்கு தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்று பெயர் வழங்கி வரலாயிற்று.

வெற்றியில் களித்த போர்வீரர்கள் கொண்ட மகிழ்ச்சியை அளவிட முடியாது. போர் நடக்குங்கால் அவர்கள் செய்த ஆரவாரத்தைக் காட்டிலும் வெற்றியடைந்த களிப்பினால் செய்த ஆரவாரந்தான் அதிகமாக இருந்தது. பாண்டி நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் இந்தப் போரின் முழு விவரங்களையும் அறிந்திருந்தனர். மிக இளையவனாக இருந்தாலும், இரண்டு பேரரசர்களையும் ஐந்து வேளிர் மன்னர்களையும் ஒருங்கே தாக்கி வெற்றியடைந்தது ஆச்சரியப்படத்தக்கதல்லவா? ஒவ்வொரு ஊரிலும் உள்ள பெண்டிர்களும் சிறுவர்களும் கூட போரின் வரலாற்றை நன்கு அறிந்திருந்தனர்.

பாண்டி நாட்டில் நால்வகை நிலங்களும் வளம் பெற்றிருந்தன. மருத நிலத்தைச் சார்ந்த ஓரூரில் படைத்தலைவன் ஒருவன் இருந்தான்; தலையாலங்கானத்தில் நடைபெற்ற போரில் பெரும் பங்கு கொண்டவன். அவன் சமீபத்தில் நடைபெற்ற போரைப் பற்றி அடிக்கடித் தன் மனைவியிடம் சொல்வதுண்டு.

அதனால் அவள் அதை நன்கு அறிந்திருந்தாள். அவளது வீட்டைச் சுற்றிலும் ஒரே வயல்; மிக்க நீர்வளமுள்ள இடம். அக்கம் பக்கம் எல்லாம் பல குளங்கள். அக் குளங்களில் வரால், வாளை, கெண்டை முதலிய மீன் கள் ஏராளமாக இருந்தன. அவற்றை அந்த நிலத்தைச் சார்ந்த மக்கள் தூண்டிலால் பிடிப்பது வழக்கம். குளங்களில் வள்ளையும் குவளையும் ஆம்பலும் செழிப் புடன் முளைத்திருந்தன.

சில சமயம் வரால் மீனைப் பிடிப்பது கஷ்டமாகி விடும்; தூண்டிலில் குத்தப்பட்டுள்ள இரையைக் கௌவும். பிறகு வாயை எடுக்க முடியாது தத்தளிக் கும். தூண்டிற்காரன் இழுத்தாலும் வருவதில்லை; துள்ளிக்குதிக்கும். அங்ஙனம் குதிப்பதால் குவளை மலர்களை முறித்து, அக்குவளை மலரைச் சுற்றியிருக்கும் வள்ளைக்கொடியை வளைத்து பகலில் எல்லோரும் காணும்படியாகக் குளத்தையே அலைக்கழித்து விடும். அப்போது அதைக் கயிற்றினால் கட்டப்பட்ட மதங் கொண்ட ஒரு காளைக்கு ஒப்பிடலாம்.

போரிலிருந்து திரும்பி வந்த சில நாட்களில் அவனது மனைவிக்குக் குழந்தை பிறந்தது. பிறந்து சில நாட்கள்தாம் ஆயின. ஒரு நாள் தலைவன் எங்கோ வெளியில் சென்றான். இரண்டு மூன்று நாட்கள் வீடு திரும்பவில்லை. அவனது மனைவிக்குச் சந்தேகம் ஏற் பட்டது. சென்றவன் திரும்பி வந்தான்.

"எங்கு சென்றிருந்தீர்கள்?"

" எங்கும் இல்லை. நண்பர் ஒருவரைப் பார்க்கப் பக்கத்தூர் சென்றிருந்தேன்."

" பொய் சொல்லாதீர்கள்."

" இதில் ஏன் பொய் சொல்லவேண்டும்?"

" எல்லாம் எனக்குத் தெரியும்."

" என்ன 'எல்லாம்' உனக்குத் தெரியும்? "

" நீங்கள் அவளுடன்..............."

" எவளுடன்......வீண் சந்தேகங் கொண்டால். நான் என்ன செய்வது?"

" நான் என்ன செய்வதா? நீங்கள் அவளுடன் மிக்க மணல் பொருந்திய வையைக்கரையில் மகிழ்ச்சியாக, உல்லாசமாக, இரண்டு நாட்கள் நடமாடவில்லையா ?

" இல்லவே இல்லை. இது வெறும் பொய்."

" பொய்யா? நானு வந்து பார்த்தேன். போனவர்கள், வந்தவர்கள் எல்லாம் பேசிக்கொள்ளுகிறார்களே."

" யார் யார் பேசிக்கொள்ளுகிறார்கள்? "

"ஒருவர் இருவருக்குத் தெரிந்தால்தானே பேசிக் கொள்ள? ஊரெல்லாம் இதைப்பற்றித்தான் ஒரே ஆர்ப்பாட்டமாக இருக்கிறதே. வேட்டுவன் தூண்டிலில் கோத்த இரையை வாளைமீன் உண்டு, முள்ளில் சிக்கிக்கொண்டு, இலை கிழிய எழுந்து, குவளை மலர்

முறியப் பாய்ந்து, அக்குவளையைச் சூழ்ந்த வள்ளையை மயக்கி, பகலில் எல்லோரும் காணும்படியாகக் குளத்தைக் கலக்குவது போலிருக்கிறது உங்கள் செயல்.

அவளது பேச்சில் உள்ள உள்ளுறைப் பொருள் தான் மிக இன்பம் பயப்பது. மீன் தலைவனைக் குறிக்கின்றது. தூண்டில் பாணனையும் தூண்டில்முள் பாணனது வலிய நெஞ்சையும் அதில் உள்ள இரை பாணனது இனிய சொல்லையும் குறிக்கின்றன. மீன், முள்ளிலுள்ள இரையை உண்டது, அவன் பரத்தையருடன் இன்பம் அனுபவித்ததைத் தெரிவிக்கிறது. குவளைமலர்கள் ஊரிலுள்ள மக்களையும் வள்ளை அவளது நெருங்கிய சுற்றத்தாரையும் குறிக்கின்றன. குளம் ஊருக்கு உவமையாக நிற்கிறது. மீன் குளத்தை அலைக்கழிப்பது அவன் பகலில் வந்து ஊராருக்கு எல்லாம் இவ்விஷயம் தெரியும்படி செய்து விட்டதை உணர்த்துகிறது.

இவ்வுள்ளுறைப் பொருளையும் பாண்டியனது வரலாற்றையும் அடக்கி தலைவியின் கூற்றாக வரும் பாட்டு

"பகுவாய் வராஅல் பல்வரி இரும்போத்துக்
கொடுவாய் இரும்பின் கோளிரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழியக் குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப் பாய்ந்தெழுந்
தரில்படு வள்ளை ஆய்கொடி மயக்கித்
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது
கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு
நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர!
வருபுனல் வையை வார்மணல் அகன்துறைத்
திருமருது தோங்கிய விரிமலர்க் காவின்
நறும்பல் கூந்தல் குறுந்தொடி மடந்தையொடு

வதுவை அயர்ந்தனை என்ப; அலரே.
கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்,
ஆலங் கானத் தகன்றலை சிவப்பச்
சேரல் செம்பியன், சினங்கெழு திதியன்,
போர்வல் யானைப் பொலம்பூண் எழினி,
நாரரி நறவின் எருமை யூரன்,
தேங்கமழ் அகலத்துப் புலர்ந்த சாந்தின்
இருங்கோ வேண்மான், இயல்தேர்ப் பொருநன் என்று
எழுவர் நல்வலம் அடங்க, ஒருபகல்
முரசொடு வெண்கொடை அகப்படுத் துரைசெலக்
கொன்றுகளம் வேட்ட ஞான்றை
வென்றிகொள் வீரர் ஆர்ப்பினும் பெரிதே "

அகநானூறு 36 (மதுரை நக்கீரர்)

[ *பகுவாய் - பிளந்த வாய்; வரால் - வரால் மீன்; துற்றி - விழுங்கி; அரில்படு - பிணக்கம் மேவிய; மயக்கி - கலக்கி; வாங்க - இழுக்க; கயிறிடு கதச் சேப்போல - கயிறிட்டுப் பிடிக்கும் சினம் மிக்க காளைபோல; திருமருது - அழகிய மருத மரம்; காவில் - சோலையில்; நறும்பல் - மிக்க மணமுடைய; மடந்தை - (இங்கு) பரத்தை; வதுவை - மணம்; அயர்ந்தனை - செய்து கொண்டனை; கொய்சுவல் புரவி-கொய்தபிடரிமயிரினை உடைய குதிரை; ஆலங்கானம் - தலையாலங்கானம்; அகன்றலை சிவப்ப - அகன்றஇடம் எல்லாம் செந்நிறம் அடைய; பொலம்பூண் - பொற்பூண் அணிந்த; நார் அறிநறவு-பன்னாடையால் அரிக்கப்பெற்றகள்; அகலம்- மார்பு; புலர்ந்த - (பூசிக்) காய்ந்த; வலம் - வெற்றி; அகப்படுத்து - பற்றிக் கொண்டு; உரைசெல - புகழுரை எங்கும் பரவ; களம்வேட்ட - களவேள்வி செய்த (கொன்ற); ஆர்ப்பு - ஆரவாரம்;*]

# கல்யாணம் செய்துகொள்

அவன் மலைநாட்டைச் சேர்ந்தவன்; வாலிபன். ஒரு நாள் அவன் மலை நாட்டில் வசிக்கும் குன்றவாணர் மகள் ஒருத்தியைக் கண்டான். ஊழ்வினை காரணமாக அவர்களிடம் காதல் அரும்பி மலர்ந்தது. காதலின் விளைவாகிய களவொழுக்கம் சில நாட்கள் நடைபெற்றது.

எவ்வளவு நாட்கள்தாம் இவ்வாறு களவு நிகழ முடியும்? அதுவும் காதல் சம்பந்தமான விஷயங்களை நீண்ட நாட்கள் மறைத்து வைக்க முடியுமா? எப்படியோ இரகசியம் வெளிப்பட்டு விட்டது. அக்கம்பக்கத்திலுள்ள ஒருவர் இருவர் இதைப்பற்றி ஒருவர் காதை ஒருவர் மெதுவாகக் கடிக்க ஆரம்பித்தனர். பிறகு ஊரிலுள்ள பலருக்கும் தெரிந்து, எங்கு பார்த்தாலும் இதைப்பற்றி ஒரே பேச்சாக இருந்தது.

இதை அவளது தாய் தந்தையர் அறிந்தனர். என்ன செய்வதெனத் தெரியவில்லை. ஊர்வாயை அவர்களால் மூட முடியுமா? "நடந்தது நடந்து போய் விட்டது. இனிமேல் எப்படியாவது நடக்காது தவிர்த்தால் போதும்" என்ற முடிவுக்கு வந்தனர் அவளது பெற்றோர்கள். அவளது தாய் தந்தையர் அவள்மீது

அளவு கடந்த அன்பு கொண்டிருந்தனர்; அவளை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்தனர். வளர்த்து என்ன பயன்? அவள் ஆண் மகன் போல் எப்போதும் அவர்களுடன் இருக்க முடியுமா? எப்பொழுதாவது கல்யாணம் செய்து கொண்டு கணவன் வீட்டிற்குப் போகவேண்டியவள் தானே அவள்?

பெற்றோர்கள் தம் மகளது களவு ஒழுக்கத்தைத் தமக்குத் தெரிந்ததாகக் காட்டிக்கொள்ளவில்லை. அவள்மீது அளவு கடந்த கோபம் கொண்டாலும், அதையும் அவர்கள் வெளிக்காட்டவில்லை. காட்டினாலும் முடியுமா? கோபித்துக் கொண்டால், ஒருக்கால் வீட்டை விட்டுக் கம்பி நீட்டிவிட்டால் என்ன செய்வது என்று எண்ணித்தான் கோபித்துக் கொள்ளவில்லை போலும். அவர்கள் மட்டிலும் என்ன, உலகியலை அறியாதவர்களா? தாம் இளமையாக இருந்தபோது காதல் ஒழுக்கத்தில் ஒழுகவில்லையா?

இப்போது எப்பொழுதையும்விட அதிக அன்பு காட்டலாயினர்.

“என் கண்ணே, நீ வெளியே போகாதே. நீ வெளியில் போனால், எனக்கு என்னவோமாதிரி யிருக்கிறது. என்னால் தனிமையாக வீட்டில் கொஞ்ச நேரம் கூட இருக்க முடியவில்லை” என்று கூறுவாள் தாய் ஒரு நாள்.

“எங்கும் போகவில்லை அம்மா, நமது தோட்டத்தில்தானே இருந்தேன்” என்பாள் மகள்.

" அதுகூட வேண்டாம் கண்ணே. அக்கம் பக்கத்தில் தெய்வம் நடமாடுவதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். நீயோ ஒருவயதுப் பெண்; கல்யாணம் செய்துக்கொள்ள வேண்டியவள்." என்று கூறுவாள் அன்னை.

இப்படியாக அவளது அன்னை அவளைக் கட்டுப் பாடு செய்து வந்தாள். இதை அகப்பொருள் நூலார் 'இற்செறிப்பு' என்று கூறுவார்கள்.

அவளது தந்தையோ, "அம்மா, நீ ஏன் வெயி லில் அங்கும் இங்கும் அலைகிறாய்?" என்று கேட்பார்.

" அதிக தூரம் செல்லவில்லை, அப்பா. வீட்டி லேயே உட்கார்ந்து கொண்டிருப்பதில் பொழுது போக வில்லை. அதனால், நமது கொல்லைப் புறமாகத்தான் கொஞ்சதூரம் வெளியில் சென்று வந்தேன்" என்று பதில் கூறுவாள் மகள்.

" அதற்காக நினது கால் சிவக்க இந்த வெயி லில் வெளிச்செல்லலாமா? காலில் செருப்பும் இல்லை, கல் குத்த, முள் குத்த ஏன் இப்படி அலையவேண்டும்?" என்று கேட்பார்.

இப்படியாக அவளது தந்தை அவளைக் கட்டுப் பாடு செய்து வந்தார்.

அவளது உயிர்த்தோழி இக் 'கெடுபிடியை' நன்கு அறிவாள் அவளது களவு ஒழுக்கமும் அவ ளுக்குத் தெரியும். அதற்குக் கருவியாகவும் இருந்து

வந்தாள். எங்கு சென்றாலும், தோழி அவளுடன் செல்வது வழக்கம்.

அவர்கள் வாழ்ந்து வந்த இடம் மலைப்பாங்கானது. எங்கு பார்த்தாலும் தினைப்புனமாக இருக்கும். அழகிய மடமங்கையர் அதைக் காவல் புரிந்து வருவார்கள், கிளி முதலிய பறவைகள் கதிர்களை அழிக்காவண்ணம். எப்பக்கம் பார்த்தாலும், அவர்களது கிளிகளை ஓச்சும் சத்தம் கேட்டவண்ணமாக இருக்கும். அச்சத்தம் கிளிகளின் சத்தத்தைப் போலவே இருக்கும். கிளிகளும் தம் இனத்துப் பறவைகளின் ஒலிகள் தாம் அவைகள் என எண்ணி புனங்களைவிட்டு வெளியேரு. இந்த ஒலிகளினால் கிளிகளின் கூட்டம் அதிகமாதலும் உண்டு.

தினைப்புனத்தின் ஓரங்களிலுள்ள மரங்களில் கிளிகள் எப்போதும் கூட்டங்கூட்டமாகவே இருக்கும். மரக்கிளைகளில் அணிப்பிள்ளைகள் ஓடி விளையாடி சத்தமிட்டுக் கொண்டிருக்கும்.

அங்கு பலாமரங்கள் அதிகம். பழம் பழுக்கும் பருவத்தில் குறவர்கள் அங்கு சிறு குடிசைகளை அமைத்துக் கொண்டு காவல் காப்பது வழக்கம். தினைக் கதிர் முற்றும் காலத்தில்தான் வேங்கை மரமும் பூக்கும். வேங்கைப் பூக்கள் பார்ப்பதற்கு மஞ்சள் நிறமாக இருக்கும், இப்பூக்கள் குடிசைகளின் மீது உதிர்ந்து கிடப்பதால், குடிசைகள் பூக்களால் வேயப்பட்டவை

போல் தோன்றும். அக்கம்பக்கமாக வரும் யானைகளுக்கு அவை புலிகள்போல் தோன்றும். பயத்தால் அவை குடிசைப்புறம் நெருங்குவதே இல்லை; வந்த பக்கமாகவே வெருவியோடிவிடும்.

இப்படிப்பட்ட மலை நாட்டில் ஒரு நாள் அவன அவளைச் சந்திப்பதற்குப் பகலில் வந்தான். வீட்டில் இருக்கும் காவலின் கடுமையை அறிந்த தோழி இக் களவு ஒழுக்கத்தை நீட்டிக்க விரும்பவில்லை. அவனைச் சந்தித்து மிகத் தந்திரமாகப் பேசுகிறாள்.

"இனிமேல் அவளைப் பகலில் சந்திக்க முடியாது"

"ஏன் ?"

"வர வர வீட்டில் 'கெடுபிடி அதிகமாகி விட்டது."

"ஏன் ? யாரால் ?"

"உங்கள் குட்டு எப்படியோ வெளிப்பட்டு விட்டது. ஊரெல்லாம் உங்கள் பேச்சுதான். அவளது பெற்றோர்களுக்கும் இச்சமாச்சாரம் எட்டிவிட்டது."

"அவர்கள் என்ன செய்கிறார்கள்?"

"வீட்டை விட்டு வெளிச் செல்லக்கூடாது என்கிறார்கள்."

"இன்னும் என்ன தொந்தரவு?"

“நாங்கள் இருவரும் இணை பிரியாது இருந்து பழகியவர்கள். அவளை விட்டுப் பிரிய எனக்கு மனம் வருவதில்லை. பிரிய நேர்ந்தால் அவளது பெற்றோர் என்னை அதையும் இதையும் கேட்டு உயிர் வாங்குகிறார்கள். ஆகவே அவளைத் தனியாக அனுப்ப என் மனம் கூசுகிறது.”

“பகலில்தானே இத்தொந்தரவுகள் எல்லாம்? இனிமேல் இரவில் வரட்டுமா?”

“அதுவும் முடியாது. அவள் பயந்த சுபாவமுடையவள். நீ இரவில் வந்தால், வழியில் உனக்கு என்னென்ன ஆபத்துக்கள் வருமோ என ஏங்கி உள்ளம் கலங்குவாள். அவற்றை நினைத்தாலும், அவள் உயிர் வாழ்வது கடினம்.”

“பின் என்ன செய்யவேண்டும்?”

“செய்வது என்ன இருக்கிறது? இனிமேல் இக்களவு ஒழுக்கம் முடியாது. வேறு வழியைத்தான் கண்டுபிடிக்க வேண்டும்.

“வேறு வழிதான் என்ன?”

“எங்கள் ஊரில் குறவர்கள் குடிசைகள் இருக்கின்றன. வேங்கைப்பூக்கள் அவற்றின்மீது உதிர்ந்து, குடிசைகளையே மூடிவிடும்; குடிசைகள் பூக்களால்

வேயப்பட்டவைபோல் இருக்கும். அக்கம்பக்கமாக வரும் யானை அத்தகைய ஒரு குடிசையைப் புலி என்று நினைத்துக்கொண்டு அதன் அருகேவருவதற்கும் அஞ்சும். அப்படி யிருக்கிறது உன் கதை."

"என்ன சொல்லுகிறாய்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே."

"நினைத்துப் பார்த்தால் தெரிகிறது"

"நினைத்துதான் பார்க்கிறேன். ஒன்றும் தெரியவில்லையே."

"அவளது பெற்றோர்களைக்கண்டு நீ ஏன் பயப் படவேண்டும்? வெருவத்தகாத அவர்களைக் கண்டு நீ வெருவ வேண்டிய அவசியம் இல்லையே"

"கண்டால் சும்மா விடுவார்களா?"

"யார்தான் சும்மா விடுவார்கள்? அவர்களுக்குத் தெரிகிறபடி நீ அவளுடன் பழகவேண்டும். அதற்கு ஏற்ற முறையைக் கைப்பற்றவேண்டும். இப்போதாவது தெரிகிறதா?"

"'நீ அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள் என்கிறாயா?"

"ஆம்; அதுவேதான்."

*இந் நிகழ்ச்சிகளை அடக்கிக்கொண்டிருக்கும் செய்யுள் வருமாறு:—*

"யாயே, கண்ணினும் கடுங்கா தலளே;
எந்தையும், நிலனுறப் பொருஅன்; 'சீறடிசிவப்ப
எவன்இல! குறுமகள்! இயங்குதி?' என்னும்;
யாமே, பிரிவின் றியைந்த துவரா நட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே;
ஏனலங் காவலர் ஆனு தார்த்தொறுங்
கிளிவிளி பயிற்றும் வெளிலாடு பெருஞ்சினை
விழுக்கோட் பலவின் பழுப்பயன் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பை புதைய
வேங்கை தாஅய தேம்பாய் தோற்றம்
புலிசெத்து வெறீஇய புகர்முக வேழம்
மழைபடு சிலம்பிற் கழைபடப் பெயரும்
நல்வரை நாட! நீவரின்
மெல்லியல் ஓருந் தான்வா ழலளே"

—அகநானூறு—12 (கபிலர்)

[யாய் - தாய்; கடுங்காதலள் - மிக்க அன்புடையவள்; இல - ஏடி; (விளிப்பெயர்); இயங்குதி-செல்லுகிறாய்; துவரா - உவர்த்தல் இல்லாத; ஏனலங்காவலர் - தினைப்புனம் காக்கும் மகளிர்; ஆனுது - ஓயாது; ஆர்க்கும் -ஒலிக்கும்; வெளில் -அணில்; விழுக்கோள்- பெரிய காய்; ஊன்றிய - நாட்டிய; புதைய - மறைய; புலி செத்து வெறீஇய - புலியென்று கருதி அஞ்சிய; புகர் முகம் - புள்ளிகள் பொருந்திய முகத்தினை யுடைய; வேழம் - யானை; மழை - மேகம்; சிலம்பு - பக்கமலை; கழை - மூங்கில்; பட - முறியும்படி; வரை- மலை; நீவரின் - நீ (இரவில்) வந்தால்; மெல்லியல் - மெல்லிய தன்மையுடையவள்,]

*பாடல் படிப்பதற்குச் சற்றுக் கடினமாக இருந்தாலும், பொருள் தெரிந்துவிட்டால், அளவிறந்த இன்பத்தைக் கொடுக்கிறதல்லவா?*

## நயமான பேச்சு

அவளுக்கு மணப்பருவம் வந்துவிட்டது. ஆனால் திருமணம் இன்னும் ஆகவில்லை. தோழியர்களுடன் சோலைக்குச் சென்று பூக்கொய்தும் புனலாடியும், ஆடியும் பாடியும் பொழுது போக்கி வந்தாள்.

அவன் கட்டழகு மிக்க காளை போன்றவன். அவனுக்கும் இன்னும் திருமணம் ஆகவில்லை. தோழர்களுடன் காட்டிற்கு வேட்டையாடச் செல்வான்; அங்குப் பல காட்சிகளைக் கண்டு மகிழ்ச்சியுடன் காலங் கழிப்பது வழக்கம்.

இருவரும் ஒருவருக்கு ஒருவர் ஏற்றவர்களே. ஊழ்வினை காரணமாக ஒருபோது அவர்கள் சோலையில் சந்திக்க நேர்ந்தது. அவள் தனிமையாக வந்தபோது யானை ஒன்றைக் கண்டு பயந்து கூவினாள். அப்பக்கமாக வர நேர்ந்த அவன் அவ்விடத்திற்கு வந்து யானையை விரட்டி அவளுக்கு ஆறுதல் கூறி ஆற்றிப் போனான். அன்று முதல் இருவருக்கும் காதல் உண்டாகி, முற்றிப் பழுத்து விட்டது.

அவளுடைய பெற்றோர்கள் அவளைத் தினைப் புனத்திற்குக் காவலுக்கு அனுப்புவதுண்டு. இந்தக் காலங்களிலெல்லாம் அவன் அவளைத் தினைப்புனத்தில்

தனிமையாகச் சந்தித்து வந்தான். இச்செயல் அவளது ஆருயிர்த் தோழிக்கு மட்டிலும் தெரியும். அவர்கள் அடிக்கடி தனிமையில் சந்திப்பதற்குக் கருவியாகவும் இருந்து வந்தாள்.

பகலில் காதலர்கள் தனிமையில் சந்திக்கும் இடத்தை அகப்பொருள் நூலார் 'பகற்குறி' என்றும் இரவில் சந்திக்கும் இடத்தை 'இரவுக்குறி.' என்றும் கூறுவார்கள். இக் 'களவு முறை' யை இரண்டு மாதங்களுக்குமேல் நடக்க விடுவதில்லை. இந்தக் காலத்திற்குள் எப்படியாவது திருமணம் நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்து விடுவார்கள். இவ்வேலையில் தோழி தான் பெரும் பங்கு எடுத்துக் காரியத்தை நிறைவு செய்வது வழக்கம்.

தோழி விரைவாக உலகறியத் திருமணத்தை முடித்துவிடவேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தாள். ஒரு சமயம் அவள் வீட்டிலிருக்கும் காலத்தில் அவன் அவளைச் சந்திப்பதற்கு வந்தான். அவளது நடவடிக்கைகளில் ஐயப்பட்டு வீட்டை விட்டு வெளியேறக்கூடாது என்று பெற்றோர் கட்டுப்படுத்திய பருவம் அது. தோழி அவனை வீட்டிற்கருகே சந்தித்தாள்.

ஒரு பெரிய அடிப்படையுடன் உள்ளுறைப் பொருள் ததும்பப் பேச்சைத் தொடங்குகிறாள் தோழி. "நின்னுடைய நாட்டில் நல்ல செழித்த வாழைகள் மிகுந்திருக்கும். நன்றாகப் பழுத்த கனியின் குலைகள்

அவற்றில் தொங்கும். கனிகள் வெடித்துத் தேனைச் சொட்டிக்கொண்டிருக்கும். உண்பவர்களுக்கு நறுஞ் சுவை பயக்கும் பலாப்பழங்கள் மிகுதியாக இருக்கும். அவ்வருக்கைப் பலாச்சுளையிலிருந்தும் தேன் வடிந்து கொண்டிருக்கும். இந்த இரண்டு வகைத்தேனும் கற்பாறைகளிலுள்ள குழிகளில் தேங்கியிருக்கும். சில நேரம் மந்திகள் விடாய் மிகுதியால் இத்தேனை நீர் என்று நினைத்து அளவுக்குமீறிப் பருகிவிடும். இம் மதுவின் 'போதை' யால் மிளகுக்கொடி படர்ந்துள்ள சந்தன மரத்தில் ஏறமுடியாது மயங்கி அம்மரத்தின்கீழ் நல்ல பூக்களாலாகிய படுக்கையில் அயர்ந்து தூங்கும். இங்ஙனம் பல்வேறு விலங்குகளும் நின் நாட்டில் எதிர் பாராத இன்பத்தை அடையும். அத்தகைய நாட்டின் தலைவனே!" என்று பேச்சைத் தொடங்குகிறாள்.

"ஆண் குரங்கு அறியாது தேனை அருந்தி அதனை உண்ட மயக்கத்தால், தன் தொழிலாகிய மர மேறுதலைச் செய்ய முடியாமலும், வேறிடங்களுக் குச் செல்லமுடியாமலும் அருகேயுள்ள சந்தன மரத் தின் நிழலில் பூமேல் உறங்குவதுபோலவே, நீயும் தலைவியின்பால் களவொழுக்கமாகிய இன்பத்தை அனுபவித்து, நினது தொழிலாகிய அறவழியை மறந் தும், இக்களவை நீக்கி உலகோர் அறியத்திருமணம் புரிந்து கொள்ளாமலும், மயங்கி நிற்கின்றாயே" என்று குத்திக்காட்டுவது போன்ற தோழியின் நயமான பேச்சு இன்பந்தருகிறது.

இத்துடன் அவள் பேச்சை நிறுத்திவிடவில்லை. மேலும் பேசுகிறாள்; "நீ எதிர்பாராமலே உனக்கு

இந்த இன்பங் கிடைத்தது. நீ வேண்டுமென்று விரும்பினுல், உனக்குக் கிடைக்காத இன்பமும் உண்டோ?" என்று கேட்கிருள். இதில் குறிப்பாகத் "திருமணம் செய்துகொள்" என்ற கருத்து கலந்திருப்பது கவனிக்கத்தக்கது.

"தினையும் அறுவடையாகி விட்டது" என்ற குறிப்பையும் தருகிருள். இதனுல் அவள் தினைப்புனங் காவலுக்குச் செல்ல நேரிடாதென்பதையும் ஆதலால் அவளை இனிமேல் பகற்காலத்தில் பார்க்கமுடியாதென்பதையும், அவளை வீட்டை விட்டு வெளிச்செல்லக் கூடாதென்று பெற்ருேர் கட்டுப்படுத்தி யிருப்பதையும் குறிப்பாக உணர்த்துகிருள்.

"இனிமேல் நீ இரவில் வருவதைத் தவிர வேறு வழியில்லை. அதுவும் காவலாளர்கள் அயர்ந்து தூங்கும் நேரம் பார்த்துத்தான் வரவேண்டும்" என்று இரவுக் குறியை நேர்கின்ருள். அவன் 'இனிமேல் இரவில்தான் வரவேண்டும்' என்று பகற்கனு காண்கிருன்.

அவன் கனவில் ஆழ்ந்திருக்கையில், "நிறைமதியம் நாள் நெருங்கி விட்டது" என்ற புதிர் விடுகிருள். இதனுல் "இரவில் வருவதும் முடியாத காரியம். ஏனெனில் இது மணம் செய்யவேண்டிய நாள். பலர் திருமணத்திற்குப் பெண் கேட்கும் நாள். ஆகவே விரைவாகக் கல்யாணம் செய்துகொள்" என்று நயமாக உணர்த்துகின்ருள்.

"திருமணம் செய்துகொள்" என்ற செய்தியைத் தோழி தலைவனிடம் குறிப்பிடும் நயம் உள்ளுந்தோறும் இன்பம் பயக்கிறது. தோழியின் கூற்றாக வரும் பாட்டு வருமாறு

கோழ்இலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
ஊழ்உறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்தும் நாட!
குறித்த இன்பம் நினக்கெவன் அரிய?
வெறுத்த வேளர் வேய்புரை பணைத்தோள்
நிறுப்ப நில்லா நெஞ்சமொடு நின்மாட்டு
இவளும் இனைய ளாயின் தந்தை
அருங்கடிக் காவலர் சோர்பதன் ஒற்றிக்
கங்குல் வருதலும் உரியை; பைம்புதல்
வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன;
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே.

—அகநானூறு, 2. (கபிலர்)

[கோள் இலை - வளைவிய இலைகளையுடைய; ஊழ்உறு முதிர்ச்சியுற்ற; சாரல் -பக்கமலை; ஊழ்படு -முற்றிய;

தேறல் - தேன் கடுவன் - ஆண்குரங்கு; கறிவளர் சாந்தம் - மிளகுக் கொடிபடர்ந்த சந்தனமரம்; நறுவீ-நல்லபூக்கள்; அடுக்கம் - படுக்கை; கண்படுக்கும்-உறங்கும்; குறியா -எதிர்பாராத; குறித்த - எதிர் பார்த்த; வெறுத்த - மிக்க; ஏஎர் - அழகினையுடைய; வேய்புரை - மூங்கிலை யொத்த; பணை-பருத்த; சோர்பதம் ஒற்றி - சோர்வுற்றிருக்கும் செவ்வியை மறைந்திருந்து உணர்ந்து; கங்குல் - இரவில்; பைம் புதர் - பசிய புதர் சூழ்ந்த; ஒள்ளிணர் - ஒள்ளிய பூங்கொத்துக்கள்; நெடுவெண் - மிக்க வெண்மையை யுடைய.]

# சரியான சூடு

அக்காலத்தில் இப்போதுள்ள மதுரையில் இருந்த சங்கத்திலிருந்துகொண்டு எத்தனையோ புலவர்கள் தமிழை ஆராய்ந்து வந்தார்கள். பிற்காலத்தில் தோன்றிய ஒரு சில புலவர்களைப்போலத் தாம் பெறும் பரிசல்களுக்காகப் பாடும் குணம் அவர்களிடம் இல்லை.

போற்றினும் போற்றுவர், பொருள் கொடா விடில் தூற்றினும் தூற்றுவர்' என்ற கூற்று பிற்காலத்தில் தோன்றிய ஒருசில புலவர்களால் உண்டாயிற்று எனக்கூறலாம். பண்டைய புலவர்களைப்போல, நெஞ்சு உரம் இல்லாத காரணத்தாலோ, வேறு என்ன காரணத்தாலோ பிற்காலத்திலுள்ளவர்கள் — அதுவும், ஒரு சிலர்தான்—இம்மாதிரி நடந்துகொண்டார்கள்.

ஆனால், பண்டைப் புலவர்கள் வாணிகப் புலவர்கள் அல்ல; தாம் பெறும் பொருளுக்காகப் பாடும் வழக்கம் அவர்களிடம் ஒரு நாளும் இல்லை. தங்கள் குடும்பச் செலவிற்கு வேண்டியவற்றை வேறு வகையாகச் சம்பாதித்துக்கொண்டு வாழ்ந்தார்கள். பெரும்பாலான காலத்தை சங்கத்திலிருந்துகொண்டு தமிழ் நூல்களை ஆராய்ந்துகொண்டும், தமிழ்ச் சுவையை நுகர்ந்து இன்புற்றும் வாழ்ந்து வந்தார்கள். இன்னும்,

அவர்கள் நூல்கள் இயற்றியும் தனிப்பாட்டல்கள் இயற்றியும் காலத்தை நல்ல முறையாகக் கழித்து வந்தார்கள்.

ஒரு சில புலவர்கள் தம்முடைய தாய் தந்தையர், மனைவி மக்கள் முதலியோர் பொருள் தட்டுப்பாட்டால் அல்லலுறுங்கால், அவர்களது துன்பத்தைப் போக்க, குறிப்பறிந்து கொடுக்கவல்ல உபகாரிகளிடம் சென்று பொருள் பெற்று தமது துன்பத்தைத் துடைத்துக் கொண்டார்கள். அவ்வப்போது அவர்களால் பாடப் பெற்ற ஒரு சில பாடல்களிலிருந்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்.

சங்க நூல்களிலிருந்து புலவர்களது வரலாற்றைத் தெளிவாக அறிந்துகொள்ள முடியாவிட்டாலும், அவர்களது வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு சில முக்கிய மான சம்பவங்களை அவர்களது தனிப்பாடல்களே தெரிவிக்கின்றன. புறநானூறு போன்ற சங்க நூல்களில் இம்மாதிரியான பாடல்கள் பலவற்றைக் காணலாம்..

பொறுத்தற்கரிய வறுமையிலும், துன்பத்திலும், அன்றைய புலவர்கள் தமது நிலைக்கு ஏற்காதனவும் இழிவான காரியங்களும் செய்யார்கள்; மானமே பெரிது என வாழ்ந்த பெரியார்கள் அவர்கள்.

இத்தகைய பெரியார் கூட்டத்தைச் சேர்ந்தவர் புலவர் பெருஞ்சித்திரனார். இவரது பாடல்கள் புறநானூற்றில் பல இருக்கின்றன. ஒரு சமயம் இப்புலவர்

ஈகையில் சிறந்து விளங்கிய வெளிமான் என்ற அரச னிடம் சென்றார். அப்போது அவ்வரசன் தூக்கநிலையில் இருந்தான்; தானே வெளியில் வந்து புலவரை வர வேற்று பரிசல் வழங்க இயலாமல், தன் தம்பியைக் கூப்பிட்டு புலவருக்கு மரியாதை செய்தனுப்பும்படி ஏவினான். தம்பியோ உலோபத் தன்மையுடையவன்; புலவரது புலமையின் அளவறிய இயலாதவன். ஆகவே, அவன் சிறிது பொருளைப் பரிசிலாகக் கொடுக்கவந்தான். ஆனால் பெருஞ் சித்திரனார் அதனை ஏற்றுக்கொள்ளாது மறுத்து விட்டார்; அவ்விடத்தை விட்டும் அகன்றார்.

இப்புலவர் பெருமையை நன்கு அறிந்தவன் குமணன் என்னும் அரசன்; உத்தம குணசாலி. புலவர் களை அவர்கள் தகுதியறிந்து போற்றும் இயல்புள்ள வன். அவனிடம் சென்றார் பெருஞ் சித்திரனார். புலவரது திறமை நன்கு அறிந்தவனாதலால், ஏராள மான பொருளையும் ஒரு களிற்றி யானையையும் பரிசி லாகக் கொடுத்து மிக மரியாதையுடன் வழியனுப்பி வைத்தான்.

பொருளைப் பெற்ற புலவர் மீண்டும் வெளிமான் ஊருக்கு வந்தார். அவனது ஊர்க்காவல் மரத்தில் யானையைக் கட்டி வைத்தார். வெளிமான் தம்பியை அணுகி, தான் குமணனிடம் பெற்ற பரிசிலை அவனுக் குக்காட்டி அவனை வெட்கமடையும்படி செய்ய எண்ணினார்; உலகத்தில் பொருளாலும் கல்வியாலும் மிக உயர்ந்து புகழோடு விளங்கும் அவன் அறியுமாறு காட்ட விரும்பினார். அங்ஙனமே,வெளிமான் தம்பியைக்

கண்டு, "நீ, நின்பால் வந்து யாசிக்கும் புலவர்களைப் பாதுகாப்பவர்கள் இல்லாமற் போகவும் இல்லை; பெருந் தன்மை வாய்ந்த வள்ளல்களும் உலகத்தில் இருக்கிறார் கள் என்பதை அறிவாயாக! நினது ஊர்க்காவல் மரத் தில் யான் கொண்டுவந்து கட்டியுள்ள சிறந்த யானையா னது யான் ஒரு வள்ளலிடம் பெற்ற பரிசிலாகும். இள வரசனே, யான் போய் வருகிறேன்" என்று கூறி அவனுக்கு அறிவு கொளுத்தினார் புலவர். இவ் வரலாற்றைக் கூறும் பாடல் வருமாறு:—

"இரவலர் புரவலை நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையுங் காண்இனி நின்ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்
கடுமான் தோன்றல்! செல்வல் யானே"

—புறநானூறு, 162.

[ இரவலர் - யாசிப்பவர்; புரவலை - பாதுகாத்தலை கடிமரம் - ஊர்க்காவல் மரம்; பிணித்த - கட்டியுள்ள கடுமான் தோன்றல் - விரைந்த குதிரையை யுடைய தலைவனே; செல்வல் - போகின்றேன் ]

உலோபக் குணமுள்ள வெளிமானது தம்பிக்குப் புலவர் கொடுத்த சூடு, அவரது உள்ள மாட்சியினைக் காட்டுவதோடன்றி, நமக்கும் வியப்பை உண்டாக்குகிற தல்லவா?

## கண்ணில் ஊமன்

அவன் பிறவியிலேயே குருடன்; பிறவிக்குருடன். அவனுக்குப் பேசவும் தெரியாது; ஊமையன். ஒருநாள் அவன் கடற்செலவை மேற்கொண்டான். இவன் விரைவாகப் புறப்பாடு செய்வதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. நடு இராத்திரியில், புறப்பாடு; அதுவும் மாரிக்காலத்தில்.

அது அவனது கெட்ட காலம்; திடீரெனப் புயல் வீசிற்று. கடல் கொந்தளித்தது. எத்திசையில் மரக்கலத்தைச் செலுத்துவது என்பது தெரியாமல் மாலுமி திகைத்தான்; செலுத்தவும் வசதியில்லை. இயற்கையை எங்ஙனம் எதிர்க்க முடியும்? இக்காலக் கப்பல் போலிருந்தால் ஓரளவு சமாளித்துக் கொள்ள லாம். ஆனால் அது காற்றால் செலுத்தப்படும் மரக்கலம்.

எப்படியோ கப்பல் கவிழ்ந்து விட்டது. ஒரு திட்டு அல்லது பாறையில் மோதியிருந்தால் மரக்கலம் உடைந்திருக்கும். சிதறிய மரத்துண்டுகளைப் பற்றிக் கொண்டு நீந்தத் தெரியாதவர்கள் நீந்தித் தப்பிக்கலாம். ஊமையனுக்கும் ஏதாவது ஒரு மரத்துண்டு கிடைத் திருக்கும்; திசை தெரியாவிடினும் துண்டைப் பற்றிக்

கொண்டாவது மிதந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருக்கலாம்.

ஊமையா யிருப்பவர்களுக்குப் பொதுவாகக் காது கேட்காது; ஆகவே அவர்கள் பிறர் பேசுவதைக் கேட்க முடியாது. தங்களாலும் பேசுதல் முடியாது. இவ்வூமையர்கள் படும் துன்பத்தை அளவிட்டுக்கூற முடியாது. வாயும் காதும் இல்லாது போயினும் போகட்டும்; கண்ணுவது இருந்தால், பிறர் கருத்துக் களை அவர்களது சைகைகளினுலாவது தெரிந்து கொள்ளலாம்., தாங்களும் அவ்வாறே தங்கள் கருத் துக்களைப் பிறருக்குத் தெரிவிக்கலாம். ஆனுல் வாயும் காதும் இல்லாத ஊமையர்கள் கண்ணையும் இழந்து விட்டால், அவர்கள் இவ்வுலகில் படுந்துன்பத்தைச் சொல்லவும் முடியாது. இத்தகைய ஊமையர்கள் பிறருடைய உதவிகளைக் கொண்டேதான் தமது வாழ் நாளைக் கழிக்கவேண்டிவரும்.

நமது ஊமையன் சென்ற கப்பல் பகற்காலத்தில் கவிழ்ந்திருந்தாலும், உயிர் தப்புதல் அரிது. அருகில் ஏதாவது மரத்துண்டு மிதந்தாலும் அவனுக்குத் தெரி யாது. சேய்மையிலிருந்து யாராவது கூவினுலும், அதைக் கேட்கவும் முடியாது. அவனுலும் சேய்மையி லிருப்பவர்களைக் கூவியழைத்தல் முடியாத காரியம். பக்கத்திலோ சேய்மையிலோ இருப்பவர்கள் அவன் நிலையினை அறிந்தால், ஒருகால் படகுடன் வந்து காப்பாற்றினுலும் காப்பாற்றலாம். ஆனுல் கப்பல் கவிழ்ந்தது இரவில். ஆகவே, ஒருவரும் வந்து அவனைக்

கைதூக்கிவிட வாய்ப்பில்லை. பால்போல் நிலவு காயும் இரவாகஇருந்தாலும், யாராவது வருவதற்கு அமையம் ஏற்படலாம். மழை வலுவாகப் பெய்யும் இரவானதால், ஒருவரும்வரவில்லை; வருவதற்கு வசதியும்இல்லை.

ஒரு சிறிய உதவியும் இல்லாத ஊமையனது துன்ப நிலையை உணர்ந்து பார்த்தால், திகில் கொள்ளத் தக்கதாய்,.அளவிடப்படாததாய் இருக்கிறது.

இந்நிலையினைப் பெருஞ் சித்திரனார் என்ற சங்க காலப்புலவர் நன்முக உணர்ந்திருந்தார். இவர் வறுமையின் கொடுமையினை எடுத்துக்காட்டுவதில் வல்லமை பெற்றவர். இவர் பரிசில் வேண்டிச் சென்ற காலங்களிலெல்லாம், இவரது தகுதியறிந்து, வரையாது கொடுத்து வந்தான் வெளிமான் என்ற அரசன். இவ் வள்ளல் இறந்தபோது பெருஞ்சித்திரனார் பெருந் துயரால் வருந்தினார்; நெஞ்சம் பிளவுபட்டு நைந்து பாடினார். அவர் பாடிய பாட்டில் ஊமையன் படுந் துன்பத்தை வைத்துப் பாடியிருக்கிறார். ஊமையனது நிலையினையும், அரசன் இறந்து பட்டதால் ஏற்பட்ட தனது நிலையினையும் ஒப்ப நோக்குகிறார். அவர் பாடிய பாடலின் ஒரு பகுதி வருமாறு:—

**"மாரி இரவில் மரங்கவிழ் பொழுதின்
ஆர்அஞர் உற்ற நெஞ்சமொடு ஓராங்குக்
கண்இல் ஊமன் கடற்பட் டாங்கு
வரைஅளந் தறியாத் திரைஅரு நீத்தத்து
அவல மறுசுழி மறுகலின்
தவலே நன்றுமன் தகுதியும் அதுவே."**

**—புறநானூறு, 239.**

[ஆர்அஞர் - பொறுத்தற்கரிய துன்பம்: வரை - எல்லை; திரை - அலை; நீத்தம் - வெள்ளம்; அவலம் - துன்பம் மறுகலின் - சுழலுதலைவிட; தவலே - இறந்து படுதலே.]

தகுதியான சொற்களால் தனது கருத்தைப் படிப்போனது அல்லது கேட்போனது மனதில் பதிய வைத்து, தன் மனதில் தோன்றிய உணர்வு அலைகளையே பிறர் மனதிலும் எழுப்பவல்லவனே உண்மைப் பாவலன் ஆவான்; அவன் செய்த இலக்கியமும் உண்மை இலக்கியம் ஆகும்.

# கள்வன் மகன்

அது ஒரு சிறிய ஊர். ஒரு திண்ணைப் பள்ளிக் கூடம். அதைத் தவிர அங்கு வேறு பள்ளிக்கூடம் இல்லை. அவ்வூரிலுள்ள ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும் அந்தத் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் தான் படித்து வந்தனர். எல்லோரும் சிறிய பிள்ளை கள். ஆகவே, ஆண் பெண் வித்தியாசம் இன்றி பள்ளியிலேயே பழகி வந்தனர்; கைகோத்து ஆடியும் பாடியும் வந்தனர்.

அவன் பாட்டி வீட்டில் வளர்ந்து வந்தான்; அவனது பாட்டி வீடு அவ்வூரில் இருந்தது. அவனும் அப்பள்ளிக்கூடத்தில் படித்து வந்தான்.

அவள் பக்கத்து வீட்டுப் பெண்; நல்ல அழ குடையவள். அவளையும் அவள் பெற்றோர் அப் பள்ளிக்கு அனுப்பி வைத்தனர்.

எல்லாப் பிள்ளைகளும் பழகி வருதல் போலவே, அவனும் அவளும் பழகி வந்தனர். ஆனால் ஏனையோரை விட அவர்களிடத்தில் நட்பு அதிகரித்து வந்தது.

பள்ளிக்கூடம் விட்ட பிறகு தெருவில் விளை யாடும்போது ஆண் பிள்ளைகளும் பெண் பிள்ளைகளும்

ஒன்று சேர்வதில்லை. ஆண் பிள்ளைகள் விளையாட்டு வேறு; பெண் பிள்ளைகள் விளையாட்டு வேறு. இருந்தாலும், அவன் சற்று விஷமி. வேண்டுமென்றே சில சமயம் பெண் பிள்ளைகள் விளையாடிக்கொண்டிருக்கும் போது அவர்கள் விளையாட்டைக் கலைத்து 'கலாட்டா' செய்வது வழக்கம்.

ஒருநாள் பெண்பிள்ளைகள் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தனர். பந்தை ஒருவர்மேல் ஒருவர் எறிந்து கொண்டு விளையாடினர்; ஓடிப் பிடித்துக் கொண்டு ஆடினர். கைகோத்துக்கொண்டும் பாட்டுப் பாடிக் கொண்டும் விளையாடினர். நெடு நேரம் ஆடிப்பாடிக் களைத்தபின்னர் ஒருத்தி "வீடுகட்டி விளையாடலாம் வாருங்கள்" என்றாள். எல்லோரும் இதற்கு உடன்பட்டு ஆட்டத்தில் கலந்துகொண்டனர்.

பெண்பிள்ளைகள் விளையாட்டென்றாலே அது ஒரு அலாதி; கருவிலே திருவுடையவர்கள். இளமையில் பெண் பிள்ளைகள்தாம் ஆண் பிள்ளைகளைவிட அதிக அறிவுள்ளவர்களாக இருப்பார்கள். இளமையிலேயே அவர்களுக்குப் பொறுப்புக்களை உணரும்சக்தி உண்டு. அவர்கள் விளையாட்டுக்களிலேயே பிற்கால வாழ்க்கையின் அம்சங்கள் பொலிவுறும். தங்கள் சிற்றறிவிற்கேற்ப அன்று மண்ணால் ஒரு சிறு வீடு அமைத்தார்கள். தங்கள் உடல் உடை அழுக்காவது கண்டும் ஒருவரும் அதைப் பொருட்படுத்தவில்லை.

மண்ணைக் கொண்டுவந்து குவித்தாள் ஒருத்தி; அருகிலுள்ள குளத்தில் இறங்கி கொட்டாங்கச்சியால்

நீர் முகந்து கொண்டுவந்து கொட்டினுள் வேருெருத்தி.

"'நீங்கள் கடைக்குப்போய் காய்கறி வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்று ஏவினுள் மற்ருெருத்தி.

அவள் மண்ணைப் பிசைந்து வீடு அமைத்தாள். வீட்டிற்குக் கூரைமட்டிலும் இல்லை. சமையல் அறை, சாப்பிடும் அறை, பட்டகசாலை, படுக்கை அறை — முதலிய எல்லா வசதிகளும் அமைந்திருந்தன அவள் அமைத்த வீட்டில். அவள் மிகச் சுறுசுறுப்புடன் காரியங்களைக் கவனித்து வந்தாள்.

அன்று அவனுக்கு அவன் பாட்டி அழகிய பட்டாடை உடுத்தி வெளியிலனுப்பினுள். அவன் பார்ப்பதற்கு மாப்பிள்ளைபோலவே யிருந்தான். இவன் தெருவில் வரும்போதுதான் பெண் பிள்ளைகளின் வீடு கட்டி விளையாடும் விளையாட்டு மிகத்துரிதமாக நடை பெற்று வந்தது. அவன் தூரத்தில் வரும்போதே அவள் அவனைப் பார்த்து விட்டாள்; உடனே வேலையை நிறுத்திவிட்டு ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள். இதற் குள் அவன் அவர்கள் விளையாடும் இடத்திற்கே வந்து விட்டான்.

" அன்று செய்ததுபோல் நான் கட்டின வீட்டை மிதித்தால் எனக்குக் கோபம் கோபமாய் வரும்; நான் மிகப்பொல்லாதவளாக இருப்பேன்' என்ருள் அவள்.

இவர்கள் விளையாடிய விளையாட்டும், தான் உடுத்திக்கொண்ட பட்டாடையும் அவனை யோசிக்கச்

செய்தன. தான் ஒரு பெரிய மனிதன், கல்யாணம் செய்துகொண்டு குடும்பம் நடத்துபவன் — என்றெல்லாம் தன்னைப்பற்றி நினைத்துக்கொண்டான்; பெண் பிள்ளைகளது விளையாட்டிலும் கலந்துகொள்ள எண்ணினான்.

"நாம் இரண்டு பேரும் கல்யாணம் செய்துகொண்டு தனி வீட்டில் வாழலாம். இந்தக் கூரையில்லாத வீடு நமக்கு வேண்டாம்" என்றான் அவளை நோக்கி.

"இரு, இன்றைக்கு உன் பாட்டியிடம் சொல்லி உனக்கு உதை வாங்கித் தருகிறேன்" என்றாள் அவள்.

"கணவனுக்கு மீறி நடப்பாயோ?" என்று குறும்பாகப் பேசினான் அவன்.

இப்படியாக அவன் விளையாட்டைத் தொடங்க ஆரம்பித்தான். எல்லோரும் அவனை "முட்டாள் பயலே, உனக்கு எப்போதும் இதுதான் பேச்சு" என்று அவனைத் திட்டினார்கள்.

எல்லாப் பெண் பிள்ளைகளுக்கும் முன்னால் தன்னை மனைவி முறை கூறி அழைத்தது அவளுக்குக் கோபத்தை உண்டாக்கிற்று. இரு கையாலும் மண்ணை வாரி அவன்மீது கொட்ட வந்தாள். துள்ளிக் குதித்தான் அவன். சட்டென்று அவளது கைகளைப்பிடித்து மண்ணைக்கொட்டும்படி செய்து அவளது தலையிலுள்ள பூவைப் பிடுங்கினான்; பக்கத்திலிருந்த வேறொருத்தி

கையிலுள்ள் பந்தையும் கவர்ந்துகொண்டு, அவள் கட்டிய வீட்டையும் காலால் சிதைத்துவிட்டு திரும்பிப் பார்க்காமல் கம்பி நீட்டி விட்டான்.

ஆண்டுகள் பல சென்றன. அவனும் பாட்டி வீட்டை விட்டு தன்னூர் சென்று விட்டான். அவள் அவனை மறந்தாள்; ஆனால், அவன் மட்டிலும் அவளை மறந்துவிடவில்லை. வயது ஆக ஆக, அவளது பொறுப் புணர்ச்சிகளும் வளர்ந்தன. சிறிய வயதில் விளையாடிய விளையாட்டுக்கள் எல்லாம் பழைய பாடங்களாய் விட்டன. அவளுக்குக் கல்யாணப் பருவம் நெருங் கிற்று. பொறுப்புள்ள பேச்சுக்கள் அன்னையின் வாயி லிருந்து அடிக்கடிப் பிறந்தன. அவளும் பொறுப்புக் களை உணர்ந்து வரலானாள்.

அவ்வூரில் பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் திருவிழா ஒன்று வந்தது. இத்திருவிழா விற்குப் பாட்டி அவனை அழைத்திருந்தாள். இப்போது அவன் ஒரு கட்டிளங்காளைபோல் இருந்தான். அவனது பெற்றோர் கல்யாணப்பேச்சு நடத்தி வந்த சமயம் அது. அவன் பாட்டி வீட்டிற்கு வந்திருக்குங்கால், இளமை யில் தன்னுடன் விளையாடிய அவளது நினைவு வந்தது; அவன் அவளைப் பார்க்க விரும்பினான்.

சிறு பிள்ளையாக இருந்தபோது ஏற்பட்ட சந்திப் புக்கள் இப்போது கிட்டுமா? அவளும் வீட்டைவிட்டு வெளிவருவதில்லை; பருவமுள்ள அவனுக்கும் அவளது வீட்டிற்குப் போக மனம் துணியவில்லை.

இருந்தாலும், ஒருவாறு மனதைத் தைரியப் படுத்திக்கொண்டு அவளாது வீட்டிற்குச் சென்றான். கதவுகள் திறந்திருந்தன. வீட்டிலுள்ளவர்கள் பின் புறம் சமையல் அறையில் இருந்தனர்.

"அம்மா, யாரது வீட்டில்? தாகம் எடுக்கிறது. சிறிது தண்ணீர் வேண்டும்" என்று சத்தம் போட்டான்.

"யாரோ நீர் கேட்கிறார்கள். செம்பில் நீர் கொண்டு கொடு." என்றாள் அவள் அன்னை.

நிகழப்போவதை அவள் அறிவாளா? செம்பில், நீர் கொண்டு வந்தாள்; அவன் அவள் அறியாதவாறு வெளியே மறைவாக நின்றுகொண்டிருந்தான். அவன் அவளைப் பார்க்க முடியும்; ஆனால் அவன் நின்று கொண்டிருப்பது அவளுக்குத் தெரியாது. அவள் நீர் கொண்டுவரும்போது, அவன் அவளது அன்ன நடையழகினைத் தன் கண்களாற் பருகி மகிழ்ந்தான்; மகிழ்ந்து தன்னை மறந்த நிலையில் இருந்தான். அவள் வெளியே வரும்போது ஆத்திரத்துடன் அவளது முன் கையை எட்டிப் பிடித்தான்.

"அம்மா, இவன் செய்ததைப் பார்" என்று கத்தினாள் அவள்

அன்னை திடுக்கிட்டு வெளியில் ஓடிவந்தாள். இதற்குள் அவன் அவளுக்குத் தன் உருவத்தைக்காட்டி நின்றான் புன்சிரிப்புடன். மின்னல் தோன்றுவது

போல், அவள் மனதில் இளமையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் தோன்றின.

அவளுக்கு இன்னது செய்வதெனத் தெரிய வில்லை; அவனைத் தப்புவிக்க உடனே ஒரு சூழ்ச்சி செய்தாள்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் பெண்களது அறிவு கூர்மையாக வேலை செய்யும்.

அதற்குள் அன்னையும் அவ்விடம் வந்து சேர்ந்தாள்.

"அம்மா, ஒன்றுமில்லை. நடந்தது இதுதான். நீர் பருகுங்கால், நீர் விக்கி வருந்தினன். யான் பயந்து நின்னைக் கூப்பிட்டேன்." என்று முழுப்பூசணிக்காயை யும் சோற்றில் மறைத்து விட்டாள்.

அன்னை அவனது முதுகைப் பலமுறை அழுத்தி அழுத்தித் தடவினாள். அன்னை முதுகைத் தடவிக் கொண்டிருக்கும்போது அவன் அவளைக் கடைக் கண்ணால் கொல்வதுபோலப் பார்த்து நகைக் கூட்டம் செய்தான்.

இதை ஒரு நாள் அவள் தனது உயிர்த் தோழிக்குக் கூறினாள். இந்நிகழ்ச்சிகளைக் கொண்ட பாட்டு வருமாறு :-

"சுடர்தொடீஇ கேளாய், தெருவில்நா மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி

நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா 'இல்லீரே!
உண்ணுநீர் வேட்டேன்' எனவந்தாற்கு அன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் 'சுடரிழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா' வென்றாளென, யானும்
தன்னை யறியாது சென்றேன்; மற்றென்னை
வளைமுன் கைபற்றி நலியத் தெருமந்திட்டு
அன்னாய்! இவனொருவன் செய்ததுகாண் என்றேனோ,
அன்னை அலறிப் படர்தர, 'தன்னையான்
உண்ணுநீர் விக்கினான்' என்றேனோ, அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவ, மற்றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தான்அக் கள்வன் மகன்''

— குறிஞ்சிக்கலி, 15

[சுடர் தொடீஇ - ஒளிபொருந்திய வளையல்களணிந்த பெண்ணே; சிற்றில் - சிறியவீடு; சிதையா - அழித்து அடைச்சியகோதை - கூந்தலில் சூட்டியுள்ள பூங் கொத்து; பரிந்து - பிடுங்கி; நோதக்க - நோவத்தக்க; சிறுபட்டி - சிறியனாகிய காவல் இல்லாதவன்; மேலோர் நாள் - முன்னொருநாள்; இல்லீரே - வீட்டி லுள்ளவர்களே; வேட்டேன்-விரும்பினேன்; பொற் சிரகம் - பொன்னால் செய்த செம்பு; டரிழாய் விளங்குகின்றபூணிணையுடையவளே; நலிய-தொந்தரவு கொடுக்க; தெருமந்திட்டு-வருந்தி; அலறிப்படர்தர- பயந்து ஓடிவர; புறம்பழித்து-முதுகை அழுத்தி; கள்வன் மகன் - கள்வனாகிய மகன்.]

# கண்ணீர்க்கடல்

அவன் சிறந்த பண்பாடு உடையவன். பெரிய பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவன். பொருள் அவனிடம் ஏராளமாக இருந்தது. அது அவன் தேடிய பொருள் அன்று; மூதாதையர் வழிவந்த சொத்து. ஆகவே அப்பொருளைச் செல்வமாகக் கருதவே இல்லை.. தானே தன் உழைப்பால் பொருள் தேடி விருந்தோம்ப வேண்டும் என்ற கருத்துடன் வெளிநாடு சென்றான். இந்தச் செய்தியைத் தனது ஆருயிர்க் காதலியின் தோழியிடம் மட்டிலும் சொல்லிச் சென்றான். தோழி தலைவிக்கு ஆறுதல் அளித்து வந்தாள்.

அவளுக்கு உணவு கொள்ள மனம் வருவதில்லை; உணவு கொள்ளாமல் பல நாட்கள் பட்டினி கிடந்திருக்கின்றாள். நல்ல உடையை அணிவதில்லை; மணம் வீசும் மலரை அணிவதில்லை; பலவிதப் பொன்னணிகளிலும் அவளது மனம் பாயவில்லை. ஒவ்வொரு நாளும் செல்வது அவளுக்கு ஒரு ஊழிக்காலமாகத் தோன்றியது.

இவற்றிற் கெல்லாம் காரணம் என்ன? அவளுக்கு மணம் ஆகிச் சில மாதங்கள்தாம் ஆயின. இச்சில மாத காலமே அவளது காதலன் தனது அறிவு, ஆண்மை, வீரம், காதல் என்னும் அரிய நல்லியல்பு

களால் அவளை இன்புறுத்தி வந்தான். அவன் இப்போது பிரிந்து வெளிநாடு சென்றிருக்கின்றான். கணவனது பிரிவுத் துன்பம் அவளை வருத்துகிறது. தாங்கமுடியாத வேதனைக்குள்ளாகிக் காலங்கழித்து வருகிறாள்.

அவள் தன் நலங்கருதிய பேர்வழி அல்லள். இவளது ஆற்றாமையினால் இரங்கினாள் அல்லள். தன் உயிரை விடவும், தனது இன்பத்தை விடவும் தனது கணவனது நலத்தையே நாள்தோறும் நினைந்து வரும் உயர்ந்த கற்பியல் உடையவள் அவள்.

தனது கணவன் எங்குச் சென்றாரோ? சென்ற இடத்தின் தன்மை எப்படி யிருக்கிறதோ? அச்சந் தரும் பாலைவனத்தில் அலைந்து திரிகின்றாரோ? ...... ... இப்படியெல்லாம் அவள் மனத்தில் பல்வேறு நினைவுகள் தோன்றுகின்றன; மறைகின்றன; மீண்டும் தோன்றுகின்றன.

இத்தகைய நினைவுகளால் அவள் உணவு கொள்ள முடியவில்லை; சோறு என்றால் கசப்பாக விருக்கின்றது. உணவில்லாததாலும் கவலையாலும் அவள் இளைத்துத் 'துரும்பு' போல் ஆய்விட்டாள். வளையல்கள் கழன்று போகாதபடி அவற்றின்முன் வழக்கமாய் இறுகச் செறிந்து வைத்திருக்கும் 'தொடி' என்ற முன் வளையமும் அம்மெலிவினால் நெகிழ்ந்து விட்டது; அவ்வளவிற்கு அவளது உடல் இளைத்துப் போய்விட்டது.

அழுதபடியே பல நாட்கள் சென்றன. ஒரு நாள் அழுது கொண்டிருந்தபடி வானத்தைப் பார்க்க நேர்ந்தது. வெண்மேகம் ஒன்றைக் கண்டாள். அதைப் பார்த்துப் பேசத் தொடங்குகிருள்.

" ஏ மேகமே! எனது காதலர் சென்ற கானகத்தில் வெப்பம் அதிகமாக இருக்கிறது. அவர் அங்கே வாடி வதங்குகின்ருர். இந்த நேரத்தில் நீ வறண்டு வெண் மேகமாயிருந்து என்ன பயன்? ஒரு காரியஞ் செய்; அவரது பிரிவால் என் கண்களில் நீர் கடல் போல் பெருகுகின்றது. நீயும் உன் இனத்தைச் சேர்ந்த மேகங்களும் இக்கண்ணீர்க் கடலில் எவ்வளவு வேண்டுமானுலும் நீர் முகந்து கொள்ளலாம். நீர் தாராளமாக இருக்கிறது; எடுக்க எடுக்கப் பெருகிக்கொண்டேயிருக்கும். வெப்பம் மிகுந்த எனது கணவர் சென்ற கானகத்திலும் நீர் மிகுதியாகத் தேவையாயிருக்கும். ஆகவே, அன்பு கூர்ந்து நின் நண்பினங்களுடன் கூடி என் கண்ணீர்க்கடலில் நீர் முகந்துகொண்டு, கருநிறமாகி இவ்வான் வழியே விரைந்து செல்; சென்று, அவர் இருக்கும் வெம்மையான காட்டில் அவர் செல்லுமிடமெல்லாம் சென்று நீர்த்துளிகள் வீசி வெப்பம் மிகாதபடி தணிவிப்பாயின் மிகப்பேருதவியாக விருக்கும். நீ அப்படிச் செய்வாயோ? "

தலைவியின் கூற்றாக வரும் பாட்டின் பகுதி மட்டிலும் கீழே தரப்படுகிறது ;

"தாழ்பு, துறந்து தொடி நெகிழ்த்தான் போகிய கானம்
இறந்தெரி நையாமற் பாஅய் முழங்கி
வறந்தென்னை செய்தியோ வானம்! சிறந்தவென்
கண்ணீர்க் கடலாற் கணைதுளி வீசாயோ
கொண்மூக் குழீஇ முகந்து"

—நெய்தற்கலி, 28.

[தாழ்பு - தாழ்ந்து; துறந்து - நீங்கி; கைவிட்டு; தொடி - வளையல்களுக்கு முன் கையில் இறுக்கமாக அணியும் ஒரு வகை அணி; இறந்து - அதிகமாக; வறந்து - வறண்டு; நையாமல் - வருந்தாமல்; பாஅய் - பாய்ந்து கணைதுளி - நெருங்கிய துளிகள்; கொண்மூ - மேகம் குழீஇ - கூடி]

நல்லந்துவனார் கருத்தைச் செஞ்சொற்கள் அடங்கிய அவரது பாட்டு, எவ்வளவு நயமாகத் தெரிவிக்கிறது!

## குறிப்பு மொழி

கடற் கரைக்குச் சென்று காற்று வாங்கும் வழக்கம் பண்டைக் காலத்திலும் இருந்திருக்கிறது. இன்று சென்னைக் கடற்கரையிலுள்ள செயற்கை வசதிகள் போல் அன்று இல்லாவிட்டாலும், இயற்கை எழில்கள் ஏராளமாக இருந்தன. அன்றாட வாழ்க்கை நடத்தும் பொருட்டு உழைத்துச் சலித்துள்ள மக்களும் உல்லாசமாகப் பொழுது போக்கும் மக்களும் இன்றுபோல் அன்றும் கடற்கரையிலுள்ள மணல் வெளிகளில் உட்கார்ந்து காற்று வாங்குவார்கள்.

வேனிற்காலத்தில் காற்று வாங்க வருபவர்கள் மணலில் உட்கார்ந்து அதிக நேரம் உரையாடிக் கொண்டும், இயற்கை எழில்களை அனுபவித்துக் கொண்டும், விண்ணில் காணும் காட்சிகளில் ஈடுபட்டுக் கொண்டும் இருப்பார்கள். கோடை காலத்தில் சென்னைக் கடற் கரைக்குச் செல்பவர்கள் இதை அறியலாம்.

புது மணம் புரிந்துகொண்ட இளைஞர்கட்கு, இன்பந்தருவது கடற்கரை; புதிதாகப் பெற்ற வாழ்க் கைத்துணைவியுடன் நடந்துகொண்டே காற்று வாங்கு வதில் ஒரு தனி இன்பம் இருப்பதை அவர்கள் அறிவார்கள்.

காலைமுதல் மாலை வரையிலும் ஆலைகளிலும் அதுபோன்ற இடங்களிலும் உழைத்து அலுத்துப் போயிருக்கும் பாட்டாளி மக்கட்கும் சற்று நிம்மதியைக் கொடுக்கிறது கடற்கரை. வாழ்க்கைத்துணைவியுடன் ஒய்யார நடை நடந்து காற்று வாங்க வசதியில்லா விட்டாலும், ஒரு அணுவுக்குத் தேநீர்ப்பானம் பருகி, ஒரு அணுவுக்குக் காராமணிக் கடலையை வாங்கிக் கொறித்துக்கொண்டு மணலில் உட்கார்ந்துகொண்டிருந் தாலும், கடற்கரை தொழிலாளிக்கு இன்பத்தை, சற்று மன நிம்மதியை, அளிக்கத்தான் செய்கிறது.

பல்கலைக் கழகங்களில் உயர்ந்த பல பட்டங் களைப் பெற்றிருந்தாலும், ஆழ்ந்த கல்வியறிவு நிறைந் திருந்தாலும், சந்தர்ப்ப பேதத்தால், கைதூக்கிவிட ஆள் இல்லாத காரணத்தால், அரசாங்க அலுவலகங் களிலும், ஆலைகளிலும், பெரிய வியாபார இடங்களி லும் அமர்ந்து உழைத்து அன்றாட எளிய வாழ்க் கைக்கே போதாத வருவாயையுடைய 'பேனா வீரர் களுக்கும்' சற்று மனமகிழ்ச்சியை அளிக்கிறது கடற் கரை. அவர்களும் தம்போன்ற நண்பர்களுடன் உரை யாடிக்கொண்டு காற்று வாங்குகிறார்கள். வாழ்க் கைக்கே போதாத வருவாயையுடைய பள்ளி ஆசிரியர் களையும் இக்கூட்டத்துடன் சேர்த்துக்கொள்ளலாம். கடலலைகளைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டி ருக்கும்போது இளைஞர் உள்ளங்களில் புரட்சி அலைகள் எழும்; முதிர்ந்த உள்ளங்களில், தத்துவ உணர்ச்சிகள் அரும்பி, அவை வேதாந்த அலைகளாக வீசிக் கொண்டிருக்கும்.

கஷ்டங்கள் இன்னதென்பதைப் புத்தக மூலமாக அறிந்திருந்தாலும், அனுபவத்தில் எப்படியிருக்கும் என்பதை அறியாத கல்லூரி மாணவர்களும் கடற்கரைக்கு வந்து காற்று வாங்குவார்கள். சம்பாதிப்பதன் சிரமத்தை அறியாதவர்கள்; மாதாமாதம் தபால் எழுதும் சிரமத்தினால், பெற்றோர்களிடமிருந்து பணத்தைப்பெறும் கூட்டம். ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் சிறந்த பகுதி கல்லூரி மாணவனாக இருக்கும் பகுதியே என்பதை மாணவ நிலையிலிருக்கும்போது யாரும் சிந்தித்துப் பார்ப்பதில்லை. அத்தகைய கள்ளங் கபடமற்ற, பளிங்கு போன்ற உள்ளத்தைக்கொண்ட மாணவர்களும் சிறு சிறு கூட்டமாகக் காற்று வாங்குவதை சென்னைக் கடற்கரையில் இன்றுங் காணலாம்.

இத்தியாதி மக்கள் உலவி வருவது இன்றைய கடற்கரை.

இன்றைய வாழ்க்கையில் உள்ள சிக்கல்கள் போல் அன்றைய வாழ்க்கையில் சிக்கல்கள் இல்லை; பொருளாதாரத் தாக்குதல்கள் இல்லை. தவிரவும், ஒரு குறிப்பிட்ட நிலையிலுள்ளவர்கள், தம்முடைய வருவாயை நினைத்துப் பார்க்காது, அதற்குமேலுள்ள நிலையிலுள்ளவர்களைப்போல் வாழவேண்டு மென்ற போதையால், தேவைகளைப் பெருக்கிக்கொண்டு, வரவு-செலவுக் கணக்கைச் சரியாகப் போடமுடியாது திண்டாடுவதைப்போல், அன்றையமக்கள் திண்டாடினதில்லை. உழைப்பிற்கேற்ற பலனும், தேவைக்கேற்ற வருவாயும், கிடைத்ததால், மக்கள் நிம்மதியாக வாழ்ந்

தார்கள். ஆகவே, அன்றைய மக்கள் மனேநிலை ஏறக் குறைய ஒரே மாதிரியாக இருந்தது எனலாம்.

இம்மாதிரியான மக்கள் அன்றைய கடற்கரை யில் உலவி வந்தனர்.

அவன் ஊர் கடற்கரையருகே இருந்ததனுல், நாள்தோறும் மாலை நேரத்தில் காற்று வாங்கக் கடற் கரைக்குச் செல்வான்; அவனைப்போலவே, அவளும் அங்கு செல்வதுண்டு.

இப்போதிருப்பதுபோல் அவ்வளவு கூட்டம் இராது அன்றைய கடற்கரையில். ஏதாவது ஒரு சிறிய விஷயமாக இருந்தாலும் எளிதில் அது எல்லோரிட மும் விரைவாகப் பரவிவிடும்.

எப்படியோ அவர்கள் ஒரு நாள் சந்திக்க நேர்ந்தது; சந்தித்துப் பேச வாய்ப்பும் கிட்டிற்று. இருவரும் ஒருவருக்கொருவர் ஏற்றவர்களே; ஒத்த பருவமும், ஒத்த குணமும், ஒத்த அறிவும், உடையவர் களாகத்தான் இருந்தனர். நாளடைவில் அவர்களது சந்திப்புக் காதலாக மலர்ந்தது. சில நாட்கள் களவு முறையிலும் ஒழுகி வந்தார்கள்.

எப்படியோ இந்த இரகசியம் வெளிப்பட்டு விட்டது. கடற்கரைப் பேச்சு நாளடைவில் ஊர்ப் பேச்சாக மாறிவிட்டது; ஒரே அலர். ஊரெல்லாம் இவர்களது பேச்சாகத்தானிருந்தது.

ஆகவே, அவன் கடற்கரைப் பக்கமாகச் செல்

வதையே நிறுத்திவிட்டான்; வீட்டை விட்டு வெளி வருவதுகூடக் கிடையாது.

அவளையும் அவளது பெற்றோர்கள் கண்டித்து வந்தார்கள்; காவல்களையும் வைத்தார்கள்; ஒரே 'இற்செறிப்பு.' ஊரிலுள்ள இதரப் பெண்கள் அவளைப் பற்றி அடிக்கடி பேசி வந்தார்கள். அவளும் வெட்கத் தால் யார் முகத்திலும் விழிப்பதில்லை; எப்போதும் வீட்டினுள்ளேயே பொழுதுபோக்கி வந்தாள்.

அவளது களவொழுக்கத்தை அவளது ஆருயிர்த் தோழி நன்கு அறிந்திருந்தாள்; பிரிவுத் துயரால் வாடும் அவளது மனோ நிலையைத் தோழி நன்கு அறிந்தாள். அதற்கு மருந்து காணவும் முயற்சி செய்தாள்.

விரைவாக அவளுக்குத் திருமணம் புரிவிக்க வேண்டும் என்று எண்ணினாள். அவனைச் சந்தித்து அதைஅவனிடம் சொல்லவேண்டும் என்று நினைத்தாள்; அவனைச் சந்திக்கும்போது அவன் அவளது நிலையை யும் ஊர்நிலையையும் அறிய விரும்புவானே என்றும் கருதினாள்.

தோழி விரைவில் அவனைச் சந்தித்தாள்; சொல்ல வேண்டியவைகளைக் குறிப்பாகக் கூறினாள்; அவன் சிறந்த அறிஞனாதலால் புதை பொருளைத் தெரிந்து கொள்ளட்டுமே என்று கருதினாள் போலும். அவனைச் சந்தித்தது மாலை நேரம்.

"ஒளிபொருந்திய பகலவன் மேற்குத்திசையில் மறைந்து கொண்டிருக்கிறான். உலகெல்லாம் தன்னுடைய ஒளி பரவும்படி, தெளிந்த கடற் பரப்பில் அதன் அலைகளை நீக்கிக்கொண்டு, குளிர்ந்த கதிர்களையுடைய முழு நிலா எழுந்து தனது அழகிய ஒளியைப் பெய்கிறது. பலவகையான பறவைக்கூட்டங்கள் தமது இரைகளை நிறைய அருந்திப் பசியாறித் தமது இருப்பிடங்களை அடைகின்றன. வீட்டருகிலுள்ள உப்பங்கழியில் ஆரவாரமெல்லாம் அடங்கிவிட்டது போல் தோன்றுகிறது. கதிரவன் ஒளி இல்லாததால், கழியிலுள்ள வளமான குவிந்த நீல மலர்களும் இதழின் பிரிவு தெரியாமல், கண்டோர் அவற்றை ஒவ்வொரு நீல மணியே என்று எண்ணும்படியாய் இருக்கிறது. இத்தகைய கடற்கரை நாட்டுக்குத் தலைவனே!"

என்று பீடிகை போடுகிறாள் தோழி.

இது வெளிப்படையான பீடிகை. இதன் அடியில் அடிப்படையான கருத்துக்கள் உறைந்துகிடக்கின்றன. அடிப்படையாக உள்ள உட்கருத்துக்களுக்கு மேற்கருத்துக்கள் உவமையாகத்தான் வந்திருக்கின்றன. இம்மாதிரி வரும் உவமைகளை அகப்பொருள் நூலார் 'உள்ளுறை உவமம்' என்று கூறுவார்கள். பெரும்பாலும் கலித்தொகை, அகநானூறு, நற்றிணை ஐங்குறுநூறு போன்ற அகப்பொருள் நூல்களில் இவ்வகை உவமைகள் மலிவு.

உலகுக்கு ஒளி கொடுத்துக் கொண்டிருந்த

சூரியன் மேற்கு மலையில் மறைந்தான் என்பதனுல் அவளுக்கு இன்பம் கொடுத்துக் கொண்டிருந்த அவன் ஊரில் வந்து மறைந்து கொண்டான் என்ற கருத்து உறைந்து கிடக்கின்றது. முழு நிலா விளக்கமாய் எழுந்தது என்பதனுல் அவளது வீட்டில் காவல்கள் பலமாயிருக்கின்றன என்னும் கருத்து அடங்கி யிருக்கிறது. பறவை இனங்கள் ஆரவாரம் அடங்கி தத்தம் இருப்பிடங்களை அடைந்தன என்பதனுல் அக்கம் பக்கத்திலுள்ள பெண்களின் பழிச் சொற்கள் அடங்கி அவர்கள் வீட்டில் அமைந்து இருக்கின்றனர் என்பது பெறப்படுகிறது. நீல மலர்களை நீலமணிகள் என்று மருள்கின்றனர் என்பதனுல், அவளை வீட்டிலுள்ளவர் கள் மருண்டு மருண்டு பார்க்கின்றனர் என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துகிருள். கழி, உறக்கத்தில் இருக்கிறது என்பதால், ஊர் அமைதியாக இருக்கிறது என்பதைத் தெரிவிக்கிருள். குளிர்ந்த கடற்கரை தலை வனே என்பதனுல், அவன் ஒன்றும் அறியாதவனைப் போல் இனிமையாக இருக்கிருன் என்பதை அவன் நினைவுக்குக் கொண்டு வருகிருள்.

இவ்வளவு உட்கருத்துக்களைத் தெரிந்துகொள் ளும்படி நிலத்தின் இயற்கையைப் புனைந்துரைப்பது

போல, தோழியின் கூற்று அமைந்திருக்கிறது அச் செய்யுட் பகுதி வருமாறு:—

"ஒண்சுடர் கல்சேர உலகுஊரு நகையது
தெண்கடல் அழுவத்துத் திரைநீக்கா எழுதருஉம்
தண்கதிர் மதியத் தணிநிலா நிறைத்தரப்
புள்ளினம் இரைமாந்திப் புகல்சேர ஒலிஆன்று
வள்இதழ் கூம்பிய மணிமருள் இருங்கழி
பள்ளிபுக் கதுபோலும் பரப்புநீர்த் தண்சேர்ப்ப!"

— நெய்தற்கலி, 4.

[ஒண்சுடர் - சூரியன்; கல் - மேற்குமலை; உலகுஊரும் - உலகமெல்லாம் தனது ஒளிபரப்பும்; திரை - அலை; எழுதரூஉம் - தோன்றும்; அணி-அழகிய; புள்ளினம்- பறவைக் கூட்டங்கள்; மாந்தி-நிறையத்தின்று; புகல்- இருப்பிடம்; கூம்பி - குவிந்த; மணிமருள் - நீலமணி என்று மருளும்; பள்ளி புக்கது - உறக்கத்தில் புகுந்தது.]

# அறிவு வேட்கை

'கல்வி கரையில, கற்பவர் நாள் சில' என்று கல்வியின் அளவின்மையையும் கற்பவர்களின் குறுகிய வாழ்நாளையும் குறிப்பிட்டிருக்கிறார்கள் தமிழ் நாட்டு மூதறிஞர்கள். கற்கக் கற்கக் குறையாத கல்வியைப்பற்றியும் மனிதர்களுடைய குறைந்த வாழ்நாளைப் பற்றியும் இந்நாட்டு அறிஞர்களும் மேனாட்டு அறிஞர்களும் எவ்வளவோ கூறியிருக்கிறார்கள்.

ஆதியில் மனிதர்கள் விலங்குகள் போல் காட்டுமிராண்டிகளாகத் திரிந்து வந்தனர். உண்டு உயிர் வாழ்வதைத் தவிர அவர்கள் வேறொன்றையும் அறியார். அவர்களுக்கு அணிவதற்கு ஆடையில்லை; கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு மொழியில்லை. தழைகளையும் தோல்களையும் அணிந்து வந்தார்கள். ஒலிக் குறிப்புக்களாலும் சைகைகளாலும் கருத்துக்களைத் தெரிவித்துக் கொண்டார்கள். நாளடைவில் ஒலிக் குறிகள் வரிவடிவமாகிப் பிறகு மொழியாக வளர்ந்தன. முதலில் மொழி அன்றாட வாழ்க்கையில் பயன்படும் கருவியாகவே இருந்து வந்தது. வேலை செய்து பிழைக்கும் மக்கள் செலவு செய்த பணம் போக மீதியைச் சேமித்து வைப்பது போலவே, மொழிகளிலும் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படாத ஒரு சேமிப்புத் தொகை திரண்டு

வரலாயிற்று. ஒருவனுக்குச் சொத்து அதிகமாகச் சேர்ந்தாலும் அவனுக்கு அன்றாட வாழ்க்கையில் பயன் படுவது மிகக் கொஞ்சந்தான். இருந்தாலும், அவனிடம் மிகுதியாகச் சொத்து இருத்தல் அவனுக்குப் பெரு மதிப்பைத்தருவதுபோலவே, தொழிலுக்கும் வாணிபத் திற்கும் ஒருவந்தமாயிருக்கும் மொழிக்குப் புறம்பே பழமையையும், புதுமையையும் சிந்திக்கப் பயன்படும் சேமிப்புத் தொகை யால் மொழிக்கும் பெருமை உண்டாகிறது. இப்பகுதிதான் இலக்கியம் என்று வழங்கப்படுகிறது. மனிதனுடைய கருத்து வளம் பெறவே மொழிகளிலும் இலக்கியங்கள் வளர்ந்தன.

ஒரு மொழியைப் பேசும் மக்கள் நெடுங்காலமாக உயர்நிலையில் வாழ்ந்திருந்தால்தான் அவர்கள் மொழி யிலும் இலக்கியங்கள் வளர்ந்திருக்க முடியும். இன்னும் உலகத்தில் இலக்கிய வளம் பெறாத மொழிகள் எவ்வளவோ இருக்கின்றன. தமிழ் மொழியிலுள்ள இலக்கிய வளத்தைச் சிந்தித்துப் பார்த்தால், தமிழர் களது பழைய வாழ்வின் உயர்நிலையும் தொன்மையும் விளங்கும். வருங்கால மக்கள் முன்னோர்களின் இலக் கியங்களை யெல்லாம் கற்று ஆராய்தல்தான் 'கல்வி என்று சொல்லப்படுகிறது.

உலகில் உயிர் வாழ்கின்ற உயிர்களுள் மனிதன் தலை சிறந்தவன். வளர்ச்சி நெறிக்கொள்கையும் (Doctrine of Evolution) இதைத்தான் வற்புறுத்து கிறது. மனிதனது நாடித்தொகுதி அமைப்பு (Nervous system) அவனது ஒரு தனிச்சிறப்பு. படைப்

பேணியைக் கவனித்துப் பார்த்தால் மனிதனுடைய குழந்தைப் பருவம்தான் மிகுதியாகவிருக்கிறது. ஏனைய உயிர்கள் தம் பெற்றோர்களிடமிருந்து உயிர் வாழ்வதற்குப் போதுமான சிறிது அறிவைப் பெறுகின்றன; மிக விரைவிற் பெறுகின்றன. நெடுங்காலமாக இவைகள் இதற்குமேல் முன்னேருது இப்படியே காலங் கழிக்கின்றன. ஆனுல் மனிதன் அப்படி அல்லன். தனது மூதாதையர் தங்கள் அனுபவத்தையெல்லாம் எழுதிவைத்துப்போன நூல்களைப் படிக்கவேண்டியவனுக விருக்கின்றுன். சிக்கலான உலக வாழ்க்கைக்குத் தன்னைத் தகுதி செய்துகொள்ள இவ்வனுபவத்தையெல்லாம் மனிதன் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. தவிரவும், மெய்யுணர்தற்றுறையிலும் மனிதன் முன்னேற இடம் இருக்கிறது. இவற்றை யெல்லாம் அறிந்துகொள்வதற்குப்போதிய காலம் வேண்டியிருப்பதால் மனிதனுடைய குழந்தைப் பருவம் மிகுதியாகயிருக்கிறது என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

உலக வாழ்க்கையை வெற்றியுற நடத்துவதற்கு மொழி அறிவு இன்றியமையாதது என்பது உலகியலறிஞர்கள் நன்கு அறிவார்கள். பொறிகளால் அனுபவிக்கும் இன்பத்திற்குத் தாங்கியான பொருளைத் திரட்டுவதற்கு 'மொழி அறிவு' போதுமானது. அறிவிற்கு விருந்தாக விருக்கும் 'இலக்கியத்தை அறிந்துகொள்வதற்கு 'மொழி அறிவு மட்டிலும் போதாது; நல்ல பயிற்சி பெற்ற 'இலக்கிய அறிவு' இன்றியமையாதது. பொருள் இருக்கும் வரையில் தான் பொறிகருவியாக இன்பத்தை நுகரலாம்;

பொருளற்ற நிலையில் அதன் காரியமாகிய இன்பத்தை இழந்து வருந்தும் நிலையேற்படும். அறிவு கருவியாக அடையும் இலக்கிய இன்பம் எப்போதும் குறையாது. வருத்தப்படவேண்டிய பிரிவு அதற்கு இல்லை என்பது திண்ணம். தவிரவும், பொருளால் உண்டாகும் இன்பம் வளர வளர அதற்குக் காரணமாக விருக்கும் பொருள் சுருங்கிக் கடைசியில் இல்லையாய்விடும்; அறிவால் படைக்கும் இன்பம் வளர வளர அதற்குக் காரண மாகிய அறிவும் வளர்ச்சியடையும். ஆகவே பொறி கருவியாக நுகரப்படுவதைச் 'சிற்றின்பம்' என்றும், அறிவு கருவியாக நுகரப்படுவதைப் 'பேரின்பம்' என்றும் கூறினும் பொருந்தும்.

இம்முடிபுகளை யெல்லாம் திருவள்ளுவர் நன்கு அறிந்திருந்தார். இவற்றை யெல்லாம் தமது திருக் குறளில் கல்வி, கல்லாமை, கேள்வி என்ற அதிகாரங் களில் நன்கு விளக்கி யிருக்கிறார். இவற்றைத் தவிர அந்நூலிற் பல இடங்களில் இக்கருத்துக்களின் சாயல் நிழலுகின்றது.

சிற்றின்பத்தில திளைத்திருப்பவர்கள் பேரின்பத் தைப்பற்றி நினைப்பது குதிரைக் கொம்பு. அங்ஙன மிருக்க நமது வள்ளுவப் பெருந்தகை இதற்கு நேர் மாறாக விருக்கிறார். இன்பப் பாலில் காம வேட்கையில் மூழ்கியிருக்கும் ஒருவனைப் 'பேரின்பத்தைப் பற்றிப் பேசச் செய்கிறார். இது பாவலரது அறிவு வேட்கை யைக் காட்டுகிறது.

களவுத்துறையில் வரும் தலைவன் ஒருவன் ஊழ் கூட்டுவிக்கத் தனது அறிவிக்கும் ஏனைய நலன்கட்கும் பொருத்தமான தலைவி ஒருத்தியை எய்தப் பெறுகின்றான். இயற்கைப் புணர்ச்சி நடைபெறுகின்றது. பின்னர் முறையாகப் பாங்கன், பாங்கி முதலிய வாயில்களால் தலைவியைப் பலமுறை சந்திக்க வாய்ப்புக் கிடைக்கிறது; இணைவிழைச்சால் இன்பம் அடைகிறான்.

ஒரு சமயம் தான் அடைந்த இன்பம் எவ்வாறு இருந்தது என்பதைத் தனக்குத் தானே சொல்லிக் கொள்கிறான். இவ்வின்பம் தலைவியும் எய்தப் பெற்றாலும் அவளிடம் குறிப்பால் நிகழுமேயன்றி, கூற்றால் நிகழாதாகையால், அதனைப் பாவலர் காட்டவில்லை.

கடலில் செல்லுபவர்கள் வானம் நீரைத் தொட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்திருக்கலாம். உண்மையாக வானம் நீரைத் தொடவில்லை யென்பதை நெடுந்தொலைவு செல்பவர்கள் அறிவார்கள். அது போலவே பரந்த நூல்களைப் படித்தவர்கள் அறிவிற்கும் எல்லையில்லை என்பதை உணர்வார்கள். மேலும் படிக்கப் படிக்க படிப்போரது அறியாமை வெளிப்பட்டுக்கொண்டே யிருக்கும். 'நமக்குத் தெரியாத பொருள்கள் இன்னும் எவ்வளவு இருக்கின்றனவோ?' என்ற வியப்பும் திகைப்பும் ஏற்படும்.

இயற்கைப் புணர்ச்சியின்போது தலைவன் இணைவிழைச்சால் முழு இன்பத்தை அடைந்தாலும், பிறகு அடையும் இன்பம் அவனுக்குப் புதிதாகத் தோன்றுகிறது.

தலைவியைச் சந்திக்கும் ஒவ்வொரு தட்டவையிலும் அவன் புதியதோர் இன்பத்தைப் பெறுகிறான்.

தலைவனது கூற்றாக வரும் குறட்பா வருமாறு :-

அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.

— குறள், 1110.

[ அறிதோறும் - நூல்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள்களை அறியும் ஒவ்வொரு தடவையிலும்; சேயிழை - சிவந்த இழையினை யுடைய பெண்; செறிதல் - சேர்தல்; கூடுதல் ]

# மதிப்புரை

'மதிப்புரை' பெறுவதென்பது பண்டைக் காலத்திலிருந்து நூல் எழுதுபவர்கள் கைக்கொள்ளும் வழக்கமாக இருந்து வருகிறது. பல நுட்பங்களை யெல்லாம் விரித்து நூல் எழுதினாலும் ஆக்கியோனே அதைப் புகழ்ந்துகொள்வது அவ்வளவு நன்றாக இல்லை. இது குறித்துதான் பிறரிடமிருந்து மதிப்புரை பெறுதல் வழக்கமாக வந்திருக்கவேண்டும்.

தற்காலத்தில் பெரும்பாலும் எல்லா நூல்களும் மதிப்புரையுடன்தான் வெளிவருகின்றன என்று சொல்லலாம். இப்போது 'பெரிய மனிதர்களிடம் மதிப்புரை பெறுவது பழக்கத்திலிருந்து வருகிறது. நூலாசிரியனது செல்வாக்கினாலோ நூலில் சொல்லி யுள்ள பொருளின் சிறப்பினாலோ நூல் விற்பனையாகா விடினும், மதிப்புரைதந்த பெரியாருடைய பெயருக் காவது நூல் விற்பனையாகட்டும் என்ற கருத்தினால் தான் இம்மதிப்புரை பெறும் வழக்கம் இருந்து வருகிறது.

பண்டைக் காலத்தில் இவ்வழக்கம் இருந்தது என்பதற்கு இலக்கண நூல்களே சான்றாக இருக்கின் றன. நூல்கள் பெருகியுள்ள காலங்களில்தான் இலக் கணங்கள் தோன்றவேண்டும். மதிப்புரையைப்பற்றி

இலக்கண நூல்கள் கூறுவதிலிருந்து மதிப்புரைபெறும் வழக்கம் அக்காலத்தில் சர்வ சாதாரணமாக இருந் திருக்கவேண்டும். எனத்தெரிகிறது. மதிப்புரையை அக்காலத்தில் 'சிறப்புப்பாயிரம்' என்று வழங்கி வந்தனர்.

தவிரவும், மதிப்புரையை இன்னார்தான் அளிக்க வேண்டும் என்ற நியதியும் இருந்து வந்ததாகத் தெரி கிறது. தனக்குக் குருவாக விளங்கிய ஆசிரியனிட மிருந்தும், தன்னோடு சேர்ந்து கற்ற தோழனிடமிருந் தும், தனது மாணாக்கனிடமிருந்தும், தனது நூலுக்கு உரை செய்தவனிடமிருந்தும் பொதுவாக மதிப்புரை பெறலாம் என்று 'நன்னூல்' என்ற இலக்கண நூல் கூறுகிறது.

சங்க காலத்தில் வெளிவந்த நூல்கள் யாவும், சங்கத்துச் சான்றோர்களால் பரிசீலனை செய்யப்பட்ட பிறகுதான் வெளிவருதல் வழக்கம். தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் மூன்று சங்கங்கள் இருந்து வந்த தாகச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். மூன்றாவது சங்கம் இப்போதுள்ள மதுரையில் இருந்த தாகக் கூறப்படுகிறது. நூல்களை ஏற்றுக்கொள்வதற் குச் சங்கத்தில் ஒரு பலகை இருந்தது; அது 'கன் மாப்பலகை' என்ற பெயரால் வழங்கி வந்தது. நல்ல நூல்களாக இல்லாவிட்டால், பலகை அவற்றை ஏற்றுக் கொள்ளாதாம்; இடம் கொடாது கீழே தள்ளிவிடுமாம்.

மூன்றாவது சங்க நூல்களுள் சிறந்து விளங் கியது திருக்குறள்; அது திருவள்ளுவரால் செய்யப்

பட்டது. இப்போது பண்டைத் தமிழரின் நெஞ்சைப் பாங்குடன் எடுத்துக் காட்டுவதற்கு இதுவே சிறந்த இலக்கிய நூலாக இருந்து வருகிறது. அது ‘சங்கப் பரீட்சை’யில் தேறிய நூலே என்பதற்குஅதற்கு மதிப்புரை நல்கியுள்ள சங்கத்துச் சான்றோர்களது மதிப்புரைகளே சான்றாகும். அவையாவும் ‘திருவள்ளுவ மாலை’ எனத்தொகுக்கப்பட்டிருக்கின்றன.

திருக்குறள் சங்கத்திற்கு வந்த நாளன்று. அக் காலத்திலிருந்த சங்கப் புலவர்கள் ஒவ்வொருவரும் ‘மதிப்புரையாக’ ஒவ்வொரு வெண்பா தந்திருக்கின்றனர். ஒவ்வொருவரும் மிகச்சிறப்பாகவே புகழ்ந்திருக்கின்றனர்; ஒவ்வொருவரும் தாம் அறிந்தவாறே நூலைப் புகழ்ந்திருக்கின்றனர்.

இச்சங்கப் புலவர்களில் கபிலர் என்பவரும் ஒருவர்; சிறந்த அறிஞர். குறிஞ்சித் திணையைப்பற்றிப் பாடல்கள் ஆக்குவதில் அதிக சமர்த்தர்.

திருக்குறள் சங்கத்திற்கு வரும் நாள் வருகிறது; இவர் அன்று அதிகாலையிலெழுந்து காலைக்கடன் முடிக்கக் கானகம் செல்லுகிறார். எவ்விதமான மதிப்புரை தரலாம் என்பதைப் பற்றி அவர் மனம் சிந்தித்த வண்ணமிருக்கிறது. கருவேல் குச்சியால் பல்லைத் துலக்கிக்கொண்டே இதைப்பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறார்.

அது பின் பனிக்காலம். ஒரு வயல். நெல்லுக்கு நீர் பாய்ச்சிக்கொண்டிருக்கிறான் குடியானவன். நீர்,

வாய்க்கால் வழியாகப் போய்க்கொண்டிருக்கிறது. வாய்க்காலின் இரு ஓரங்களிலும் அருகம்புல் நிறைந் திருக்கிறது. வாய்க்காலின் அருகே சில பனைமரங் களும் இருக்கின்றன. புல்லில் பனித்துளிகள் படிந் திருக்கின்றன. புலவர் யோசனையில் ஆழ்ந்துகொண்டு பல் துலக்கிக்கொண்டிருக்கிறார்; உட்கார்ந்துகொண்டு புல்லை உற்றுப் பார்த்தவண்ணம் இருக்கிறார். ஒரு புல்லின் நுனியிலுள்ள பனித்துளி ஒன்றில் இவர் பார்வை படுகிறது. அப்போதுதான் கதிரவன் கீழ்த் திசையில் எழுந்துகொண்டிருக்கிறான். அச்சிறு பனித் துளியில் பக்கத்திலிருந்த பெரிய பனைமரத்தின் உருவத் தைக் காண்கிறார்; ஆச்சரியமடைகிறார். இச்சிறிய பொருளில் பெரியதோர்ப் பொருளின் உருவம் தோன்று வதைப் பலமுறைச் சிந்தித்துச் சிந்தித்து அளவிலா ஆனந்தம் அடைந்துகொண்டே காலைக் கடன்களை முடித்துக்கொண்டு வீடு திரும்புகிறார்.

குறிப்பிட்ட காலத்தில் சங்கப் புலவர்கள் எல்லோரும் வந்துவிடுகிறார்கள்; கபிலரும் குறிப்பிட்ட காலத்திற்கே வந்துவிடுகிறார். திருவள்ளுவர் ஒவ்வொரு குறளாகப் படித்து அரங்கேற்றுகிறார். எல்லோரும் கவனமாகக் கேட்டு வருகிறார்கள். நூலின் சிறப்பை வியந்தவாறு மெய்மறந்திருக்கிறார்கள். சுருங்கிய குறள் களில் விரிந்த பொருளைக் குறித்துள்ள விந்தையை மெச்சுகிறார்கள். அரங்கேற்றம் முடிந்தவுடன் ஒவ் வொருவரும் தமது கருத்தை ஒவ்வொரு வெண்பாவால் தெரிவிக்கிறார்கள்.

தனது முறை வருங்கால் கபிலருக்குக் காலையில் தான் அருகம்புல்லின் நுனியில் கண்ட பனித்துளியும் அதில் தான் கண்ட பனைமரத்தின் உருவமும் நினைவுக்கு வருகின்றன. அக்காட்சியை உவமையாகக்கொண்டு அப்படியே ஒரு வெண்பாவாக்குகிறார். தினையரிசி யளவுகூட இல்லாத ஒரு சிறிய பனித்துளியில் எவ்வாறு ஒரு பெரிய பனையின் உருவம் காட்டும் குணம் இருக்கிறதோ அதுபோல பரந்த பொருள்கள் எல்லாம் வள்ளுவரது குறள் வெண்பாவால் ஆகிய நூலில் அடங்கி யிருக்கின்றன என்ற கருத்து வெண்பாவில் அமைந்து விடுகிறது. வெண்பா வருமாறு:—

" தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான் — மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட! வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி "

— திருவள்ளுவமாலை (கபிலர்).

[ தினை - மிகச்சிறிய பொருளைக் குறித்தல்; பனை - மிகப் பெரிய பொருளைக் குறித்தல்; படித்து - குணத்தை யுடையது; மனை அளகு - வீட்டில் வளர்க்கப்படும் பறவைப் பேடுகள்; வள்ளை - மகளிர் பரிமளப்பொடி இடிக்கும் போது பாடும் பாட்டு; விரி - விரித்தல்.]

பாவலர் தான் கூர்ந்து பார்த்த இயற்கைக் காட்சிகளைப் பாவில் அமைத்த திறம் படிக்குந்தோறும் உவகையை மிகுவிக்கின்றது.

# நிலையற்ற வாழ்க்கை

'இருப்பது பொய், இறப்பது மெய்' என்பது மெய் நூல்களை ஆராய்ந்த மெய்யறிவினரது துணிபு. தோன்றல், திரிதல், அழிதல் என்பவை இயற்கை நிகழ்ச்சிகள். மெய்ப்பொருளை ஆய்ந்த பண்டைப் பெரியார்கள் இவற்றை நன்கு உணர்த்தி யிருக்கிறார்கள். இன்றைய பொருளியல் ஆராய்ச்சி வல்லுநரும் இதையே தான் கூறுகிறார்கள். ஞானிகளும் விஞ்ஞானிகளும் கண்ட உண்மைகளைப் படித்து ஆராய்பவர்கள். இருவரது கூற்றுக்களும் ஒரேமாதிரி யிருப்பதை அறிவார்கள். ஞானிகளது உண்மைகள் உணர்வு நிலையைத் தொடும்; விஞ்ஞானிகளது உண்மைகள் அறிவுக்கு விருந்தாக விருக்கும்.

மனித வாழ்க்கையின் அளவைக் கணக்கிடு வதற்குக் கருவியாக விருப்பது காலம் என்னும் அருவப் பொருள். காலத்தை அளக்கமுடியாது என்பதை உணர்ந்தவர்கள் ஒரு சிலர்தாம். ஆனால் பெரும் பாலோர் அளந்துவிட்டதாக இறுமாந்திருக்கிறார்கள். உருவப்பொருளை அளப்பது எளிது. உருவப்பொருளை நீட்டல் அளவை, முகத்தல் அளவை நிறுத்தல் அளவை, எண்ணல் அளவை ஆகிய அளவைகளால் அளக்க முடியும். உலகத்தில் மக்கள் துணியை முழக்

கோலாலும், நெல்லைப் படி அல்லது மரக்காலாலும் சருக்கரையைத் தராசாலும், பணத்தை எண்ணிப் பார்த்தும் அளப்பதை யாவரும் அறிவார்கள். இங்கு எந்தப் பொருள் அளக்கப்பட வேண்டுமோ அந்தப் பொருள் நேராக அளக்கப்படுகிறது. காலத்தை இங்ஙனம் நேராக அளத்தல் முடியாது. ஞாயிறு போன்ற கோள்களின் இயக்கத்தாலும், கடிகாரம் போன்ற கருவிகளாலும் காலம் கணக்கிடப்படுகிறது. ஞாயிற்றினது இயக்கத்தால் இவ்வளவு நாழிகை ஆயிற்று என்றும், கடிகாரத்தின் முட்கள் சுற்றுவதனுல் இவ்வளவு மணி ஆயிற்று என்றும் கூறப்படுகிறதே யன்றிக் காலம் என்னும் அருவப் பொருள் துணி, நெல், சருக்கரை, பணம் போன்ற உருவப் பொருள்கள் அளக்கப்படுவனபோல் நேராக அளக்கப்படுவதில்லை என்பது அறியத்தக்கது.

பண்டைக்காலத்தில் தமிழர்கள் 'காலம்' என்ற பொருளின் சிறப்பை நன்கு அறிந்திருந்தார்கள். அதன் 'அளப்பரும் பெருமையை' நன்குணர்ந்திருந்தார்கள். உலகியல் நடைபெறுவதற்காக நாழிகைபோன்ற கணக்குகளை வைத்துக்கொண்டிருந்தாலும், மெய்யறிவினையுடைய பெரியார்கள் காலத்தைக் கூறுபடுத்த முடியாது என்பதை நன்கு தெரிந்திருந்தனர். ஆகவே இத்தகைய காலம் என்னும் அரிய அருவப் பொருளுக்குத் தலைவனைக் 'காலன்' என்னும் கடவுள் இருப்பதாகக் கொண்டிருந்தனர். எல்லாவற்றிற்கும் தலைவனாக உள்ள பரம்பொருளைக் 'காலகாலன்' என்ற பெயரால் குறித்தனர்.

சமணர்கள் தமிழுக்குச் செய்த தொண்டைப் போல எவரும் செய்ததில்லை. சிற்றின்பம், பேரின்பம் ஆகிய இருவகை இன்பங்களையும் தர ஆற்றல் வாய்ந்த நூல்களை, படிக்கும்போதே தேனூறும் தமிழ் பாக்களால் ஆக்கியிருக்கிறார்கள். சீவகசிந்தாமணி என்னும் நூல் இருவகை இன்பங்களையும் ஒருங்கு பயக்கும் பெற்றி வாய்ந்தது. இது போன்ற பல தமிழ் நூல்கள் சமணத்துறவிகளால் செய்யப்பட்டிருக்கின்றன. துறவிகளாக விருந்தாலும், சிற்றின்பத்தை அவர்கள் கூறியதைப்போல எவரும் கூறவில்லை என்று சொல்லலாம். சிற்றின்பத்தை மிக மேல் நிலைக்குக் கொண்டுபோய், அத்தகைய சிற்றின்பத்தின் நிலையாமையைக் காட்டிப் பேரின்பத்தின் ஒருவந்தத்தை மனதில் பசுமரத்தாணி போல் பதியும்படி செய்வார்கள். பின்னர்ப் பேரின்பத்தின் தன்மையை உணர்த்துவார்கள்.

'ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி' என்பது நமது தமிழ் நாட்டில் வழங்கிவரும் பழமொழி. உடல் நலமுறையையும் நீதியையும் போதிக்கும் இச்சொற்றொடரை உள்ளுந்தோறும் உவகை உண்டாகிறது. 'நாலு' என்பது நாலடியாரையும், 'இரண்டு' என்பது திருக்குறளையும் குறிக்கின்றன. நாலடியார் என்பது நானூறு வெண்பாக்களால் ஆகிய ஒரு நீதி நூல். அவ்வெண்பாக்கள் தனித்தனியாக நானூறு சமணத்துறவிகளால் பாடப்பட்டன என்பது அறியக்கிடக்கின்றது.

நாட்டுப்புறங்களில் பூசாரி மருள்கொண்டு

ஆடுவது எல்லாரும் அறிவதோர் நிகழ்ச்சி. இதனைப் பண்டைய நூல்கள் ‘வெறியாட்டு’ என்று குறிப்பிடு கின்றன. காளியம்மன், மாரியம்மன், மதுரைவீரன் போன்ற தெய்வங்களைக் கும்பிடுபவர்கள் இத்தகைய வெறியாட்டைப் பார்த்திருக்கலாம், உடலெல்லாம் சாம்பலைத் தடவிக்கொண்டு பலவிதத் தழைகளையும் பூக்களையும் அணிந்துகொண்டு வேலையோ சூலத் தையோ கையில் ஏந்திக்கொண்டு ஆடுவார்கள். இதனைக் காண்பதற்கு பலர் கூடியிருப்பார்கள். பலி யிடுவதற்கு நன்றாகக் குளிப்பாட்டிச் சந்தனம், குங்குமம் முதலியன அணியப்பட்ட ஆடு ஒன்று அருகே கட்டப் பட்டிருக்கும். சிறிது நேரத்தில் முடிவு காலம் கிட்டப் போகிறதென்பதை ஆடு அறியாது. மனிதர்கள் அடை யும் மகிழ்ச்சியை அதுவும் பகிர்ந்துகொண்டு உணர்ச்சி பொங்கக் களிப்புடனிருக்கும். ஆடிக்கொண்டு பூசாரி தன்னருகே வரும்போது அவன் கையிலுள்ள தளிர் களுடன் கட்டிய வாசனை வீசும் பூமாலையை எட்டிக் கவ்வி ஆசையுடன் உண்டு மகிழும். சற்று நேரத்தில் தனக்கு முடிவு காலம் கிட்டப்போகிறதென்பதை அறிந்தால், அவ்வாட்டிற்கு இந்த நிலையற்ற மகிழ்ச்சி உண்டாகாது.

சமணப் பெரியார் ஒருவர் இந்நிகழ்ச்சியைக் காண்கிறார். அந்நிகழ்ச்சியை எடுத்துக்காட்டாகக் கொண்டு சிற்றின்பத்தில் மிகுந்த மயக்கங்கொண்டு பேரின்பத்தை நாடாது இருக்கும் மனிதக் கூட்டங் களுக்கு ஒரு நீதியைக் கற்பிக்கின்றார். “படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக் கெடுமிதோர்

யாக்கை' என்று உடம்பின் அழியுந் தன்மையைச் சுட்டு கிறார்; அதிலும் இன்பங்களைத் துய்க்கும் இளமை இன்னும் விரைவில் அழியக் கூடியது என்பதை உணர்த்துகிறார். இதனை யுணர்ந்து இளமையிலேயே பேரின்பத்தில் நாட்டம் செலுத்தவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிறார். முனிவரது பாடல் வருமாறு ;—

'வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுளகு உண்டன்ன மன்னா மகிழ்ச்சி
யறிவுடை யாளர்கண் இல்

— நாலடியார் (16) இளமை நிலையாமை

[வெறி அயர் - ஆவேசங்கொண்டு ஆடும்; வெம் களம் - கொடிய பலியிடும் இடம்; வேல் மகன் - வேலைக் கையிற்கொண்ட பூசாரி; பாணி - கையிலுள்ள; முறிஆர் தளிர்கள் பொருந்திய; கண்ணி - மாலை; தயங்க - விளங்க; மறி - ஆடு; குளகு உண்டன்ன - தழைஇரையாகஎண்ணிஉண்டு அடைகின்றமகிழ்ச்சி போன்ற; மன்னா - நிலையற்ற.]

# உழவு காளைகள்

'சோழவளநாடு சோறுடைத்து' என்பது பழமொழி. சோழநாடு வளம் பெற்றிருப்பதற்குக் காவிரியாறே காரணம். நினைப்புக்கும் எட்டாத நெடுங்காலமாக இவ்வாறு சோழ நாட்டை வளம்படுத்தி வந்திருக்கிறது; இன்றும் வளம்படுத்தி வருகிறது; இன்னும் வளம் படுத்திவரும் என்பதற்கு ஐயமில்லை.

ஆறு பாயும் வெளிகளில் வாழும் மக்கள்தாம் நாகரீகத்தில் முதிர்ந்தவர்கள்; நாகரீகம் அவ்வெளிகளில் தான் அரும்பும். உலக வரலாற்றை ஆராய்ந்து பார்த்தால் ஆற்றோரத்தில் வசிக்கும் மக்கள்தாம் ஏனைய இடங்களில் வசிக்கும் மக்களுக்கு நாகரீகத்தைத் தந்தனர் என்பது விளங்கும்.

தேம்ஸ் நதிக்கரையில் வாழும் ஆங்கிலேயர் உலகத்திலேயே ஒரு பெரிய பேரரசினை நிலைநாட்டி விட்டனர்; ஆங்கிலேயர்களின் நாகரீகம் இன்று இவ்வுலகம் எங்கும் பரவியிருக்கிறது. வால்காயாறு பாயும் சமவெளியிலுள்ள ரஸ்ய மக்கள் இவ்வுலகத்திற்கே புதிதாய்ப் 'பொதுவுடமைக் கொள்கையைப் பரப்பி வருகின்றனர்; அக்கொள்கை இன்று அறிவுலகத்தையே கலக்கி வருகிறது; பகுத்தறிவைப் பரப்பி வருகிறது.

தமிழ் நாட்டில் மூவேந்தர்கள் ஆண்டுவந்த காலத்தில் காவிரிக் கரையில் வாழ்ந்த மக்களின் நாகரீகம் இமயம் வரை சென்றது. கரிகாற்சோழன், சேரன் செங்குட்டுவன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் போன்ற தமிழரசர்கள் வாழ்ந்த காலத்தில் காவிரிக் கரையில் வாழ்ந்த தமிழர்களின் நாகரீகம் இந்திய நாடெங்கும் பரவியது.

இங்ஙனம் தமிழ்நாடு வளம் பெற்றிருந்த காலத்தில் பல பாவலர்கள் நாட்டில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் ஏராளமாகப் பாக்களைப் பாடி மக்களுக்கு செவியுணவு கொடுத்து வந்தனர். இவர்கள் தமிழர்களது வாழ்க்கைக்கு உயிராயிருந்த அமிழ்தினுமினிய தமிழ் மொழியை வளம்படுத்தி வந்தனர்; அதனோடமையாது மனிதர்களைப் புனிதப் படுத்தியும் வந்தனர்.

பொதுவாகப் பாவலர்களைக் கற்பனைக் களஞ்சியங்கள் என்றேசொல்லலாம். இழிந்த உலோகங்களையும் உயர்ந்த பொன்னுக்கும் இரசவாதிபோன்றவர்கள். பொது மக்களின் எண்ணங்களையும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லக்கூடிய ஆற்றல் பெற்றவர்கள்.

திருத்தக்க தேவர் என்பவர் ஒரு சிறந்த பாவலர். ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றாகிய சீவகசிந்தாமணியை ஆக்கித் தமிழ்த் தாய்க்குக் காணிக்கையாகத் தந்து பெருமைப் படுத்தியவர்.

ஒரு நாள் தேவர் ஒரு வயல் வழியாகச் செல்ல நேர்ந்தது. மருத நிலத்தில் வாழும் மக்கள் நல்ல மாடு

களை வைத்திருப்பர். பாவலர் சென்ற வயலுக்குரியவன் இரண்டு காளைகளை வைத்திருந்தான். இக்காலத்திய காங்கேயங் காளைகள்போல் அவை மிக அழகாக இருந் தன. இரண்டையும் அப்போதுதான் 'எங்கோ இரண் டிடங்களில் வாங்கி சோடி சேர்த்து வைத்திருந்தான்.

காளைகள் நின்ற காட்சி தேவரின் மனத்தைக் கவர்ந்தது; அவை நின்ற நிலை பாவலரின் மனத்தில் நிலைத்து நின்றது. அவற்றின் உருவப்பொலிவும், ஒரே விதமான கொம்புகளின் அழகும், அவரது மனத்தைக் கொள்ளை கொண்டனி என்று சொல்லலாம். ஒன்றை யொன்று முகர்ந்துகொண்டும், ஒன்றோடொன்று உராய்ந்துகொண்டும் ஒன்றையொன்றுநக்கிக்கொண்டும் அன்பு பாராட்டிக்கொண்டு நின்ற காட்சிகள் எவர்மனத் தையும் கொள்ளை கொள்ளாது இருத்தல் முடியாது.



பெண்ணை மணம் புரிந்துகொண்டதனால் மாமன் மருகர்களிடையே நிலவியிருக்கும் அன்பு ஒரு தனிப் பட்டது. புதிதாக மணந்த மாப்பிள்ளை மாமனார் வீட்டார்மீது ஒரு தனியான அன்பை வைத்திருப்பது இன்றைய உலகில் நாம் கண்கூடாகக் காணும் நிகழ்ச்சி. மாப்பிள்ளை சில சமயம் ஈன்று வளர்த்த தாயை யும் இகழ்கின்றான்; கல்வி பயிற்றித் தன்னைச் சான்றோ னாக்கிய தந்தையையும் இகழ்கின்றான். இஃது இகழ வேண்டும் என்ற எண்ணத்தினாலன்று; மாமனார் வீட்டார்மீது வைத்துள்ள மோகமே இதற்குக் காரணம்.

*திருத்தக்க தேவர் சீவகசிந்தாமணியைப் பாடுங் கால் காளைகளின் காட்சியும் மாமன் மருகரது தொடர்பும் அவரது நினைவுக்கு வந்தன. ஏமாங்கத நாட்டு வளத்தைப் பாடுங்கால், இக்கருத்துக்கள் அடங்கிய சொற்படம் வெளிப்படுகிறது. இதோ அப்படம்:—*

**மாமனும் மருகனும் போல அன்பின**
**காமனும் சாமனும் கலந்த காட்சிய,**
**பூமனும் அரிசிப்புல் லார்ந்த மோட்டின**
**தாமினம் அமைந்துதம் தொழிலின் மிக்கவே.**

[ *சாமன் - காமன் தம்பி: பூ - குவளை, கழுநீர் முதலியன; ஆர்த்த-உண்ட, அனுபவித்த; மோட்டின-வயிற்றினை யுடையன* ]

*பாவலன் உவமையை அமைத்த திறம் உள்ளுந் தோறும் உவகை பயக்கிறது. எல்லா அன்பையும்விடத் தாயன்பு சிறந்ததாயிற்றே, அதனை விட்டது என்ன காரணம் என்று கேட்கலாம். சேர்ந்து நின்ற இரண்டும் ஆண்கள். தாய் பெண்பாலாதலால், அவ்வுவமையைக் கொள்ளவில்லை.*

*சரி; தந்தையன்பு தாயன்புக்கு அடுத்தபடியாக இருக்கிறது, அதையாவது கொள்ளலாமே என்றால், அங்குக் கட்டப்பட்டிருந்த காளைகள் ஒன்று மற்றொன்றிலிருந்து பிறக்கவில்லை; உழவன் இரண்டு காளைகளையும் வெவ்வேறிடத்தில் வாங்கிச் சோடி சேர்த்திருந்தான். ஆகவே, அவ்வுவமையையும் கொள்ளவில்லை.*

அதற்கடுத்தபடியாக உடன்பிறப்பன்பைக்கூறி யிருக்கலாம்; அண்ணனும் தம்பியும் போல் அன்பு காட்டி நின்றன என்று சொல்லியிருக்கலாம். அதுவும் சொல்லவில்லை. இரண்டும் ஒரே வயிற்றில் பிறக்க வில்லையாதலால் அவ்வுவமையையும் நீக்கிவிட்டார்.

அதற்கும் அடுத்தபடியாக ஆசிரியனும் மாண வனும்போல' என்ற உவமையை அமைத்திருக்கலாம். அப்படியும் கூறவில்லை. இரண்டு காளைகளும் ஒத்த பருவங்களுடையன. இவ்வுவமையைக் கொண்டால், பருவ வேறுபாடு என்ற குற்றம் நிகழும். ஆகவே, அதையும் நீக்கிவிட்டார்.

வெவ்வேறு இடங்களில் பிடித்து வந்த காளைகள் அன்புடன் ஒன்றுபட்டிருக்கும் நிலை வெவ்வேறு இடங் களிலிருந்தவர்கள் பெண் கொண்டதால் புதிய அன் புடன் பொருந்தியிருக்கும் நிலைதான் பொருந்தும். இவ்வாறு ஆழ்ந்த சிந்தனையுடன் அமைந்த செய்யுள் நமது உள்ளத்தைத் தொடுகின்றதன்றோ?

# இயற்கை அரங்கு

'நாடகமே உலகம்' என்பது உலக வாழ்க்கையில் தெவிட்டி நிற்பவரது திருவாக்கு. உலகத்தை ஒரு நாடக அரங்காகவும், உலகிலுள்ள மக்களையெல்லாம் நாடக உறுப்பினர்களாகவும் உவமித்து நமது நாட்டுக் கவிஞர்களும் மேல்நாட்டு கவிஞர்களும் பாடியிருக்கின்றனர். அவைகளைப் படிக்குங்கால் அவை நமது உள்ளங்களைத் திருத்தி உணர்ச்சிகளைத் தட்டி எழுப்புகின்றன; நமது மனமும் தன்னை மறந்து நிற்கிறது.

பொதுவாக மனிதர்கள் இன்பத்தையே விரும்புகிறார்கள்; துன்பத்தை வெறுக்கிறார்கள். உயிர் வாழ்வன அனைத்திற்கும் இம்முறை பொருந்தும். மனித வாழ்க்கையில் விரும்பியவை விலகிப் போவதும் வெறுப்பவை விரைந்து எதிர் வருவதும் நாள்தோறும் நடைபெறும் நிகழ்ச்சிகள். நினைந்தவை நினைந்தபடி நடவாததால் மனிதன் கலக்கமுறுகின்றான்; ஏங்கிப் பரிதவிக்கின்றான். வாழ்க்கையிலேயே அவனுக்கு ஒரு வெறுப்புத் தட்டுகிறது. 'நாடகமே உலகம் நாளை நடப்பதை யாரறிவார்' என்ற வேதாந்த அலை அவனது மனத்தில் எழுகிறது; அது அவனுக்குச் சற்று அமைதியையும் தருகின்றது. இந்த நிலையில் உள்ள மனித

னுக்குப் பாவலர் பாக்கள் மன அமைதியைக் கொடுக்கும். பாக்களைக் கருத்தூன்றிப் படிக்குங்கால் மனிதன் தன்னையே மறந்து விடுகின்றான். அவனுக்கு உலப்பிலா ஆனந்தம் உண்டாகிறது.

இயற்கைக் காட்சிகளை வருணிப்பதில் 'வொர்ட்ஸ் வொர்த்' என்ற ஆங்கிலப்பாவலர் வித்தகர் என்று சொல்லுவார்கள். நமது நாட்டில் எத்தனையோ 'வொர்ட்ஸ் வொர்த்துகள்' இருந்திருக்கிறார்கள். இயற்கை வருணனைகளுடன் கற்பனை நயங்களையும் கலந்து தருவதில் நமது தமிழ்ப் பாவலர்கள் பேர் போனவர்கள்.

அந்தக்காலத்தில் சடையப்ப வள்ளல் ஒரு பெரிய நிலக்கிழார். கம்பரை ஆதரித்தவர். அன்பு கனிந்து விருந்து ஓம்புவதில் பெரும்பாலும் நிலக்கிழார்களை எவரும் மிஞ்ச முடியாது; அன்புருவானவர்கள். கம்பர் எப்போதும் அவருடனே இருப்பது வழக்கம்.

ஒருக்கால் கார் காலத்தில் சடையப்ப வள்ளல் நிலத்தைச் சுற்றிப் பார்க்கச் சென்றார்; கம்பரும் கூடச் சென்றார். அன்று அவர்கள் பல காட்சிகளைக் கண்டார்கள். இருவரும் அவைகளைப்பார்த்தாலும், பாவலன் உள்ளந்தான் அவற்றைக் கவர்ந்தது.

அவர்கள் புறப்படும்போது வெயிலே இல்லை. மாலைக்காலம்; வானத்தில் கரிய மேகங்கள் உலவின. இடியின் குமுறல்கள் கேட்டன. மேகங்களைக் கண்டவுடன் சோலையில் மயில்கள் தோகைகளை விரித்தாடின. குளங்களில் தாமரை மலர்கள் பூத்தவை குவிந்திருந்தன;

நீலநிறமுள்ள குவளை மலர்கள் மலர்வனவாய்க் காணப் பட்டன. மெதுவாக வீசிய காற்றினால், குளத்தின் நீரில் சிறிது அலைகளும் இருந்தன. இவைதாம் அன்று அவர்கள் கண்ட காட்சிகள். அவை கம்பர் கருத்தில் வேரூன்றி விட்டன. தான் இராமாயணத்தைப் பாடுங் கால், இக்கருத்தைப் பயன்படுத்திக்கொண்டார்.

இராமாயணத்தில் கோசல நாட்டின் வளப் பத்தைக் கூறுங்கால் இக்கருத்து வெளிப்படுகிறது. இயற்கையையே ஒரு நாடக மேடையாக்கி விடுகிறார். தான் முன் கண்ட காட்சிகளைத் தனது கற்பனைத் திறத் தினால் மாற்றிக் கொலு வீற்றிருக்கும் அரசன் ஒரு வனைக் காட்டுகிறார். மனிதர்களின் அரசன் அல்லன். இயற்கையின் அரசன்; மருத நிலமாகிய அரசன்.

உலகில் அரசன் கொலு விருக்கையில் நாம் காணும் காட்சிகளைப் போலவே, மருதத்தினை அரச னின் அவையிலும் பாவலர் பல காட்சிகளைக் காட்டு கிறார். சேலையைப் பிடித்துக்கொண்டு விரித்தாடும் நடன மாதர்களைப்போலவே, மயில்கள் தோகைகளை விரித்தாடுகின்றன. விளக்குகளைத் தாங்கி நிற்கும் மகளிர்களைப்போலவே, தாமரைக் கொடிகள் கூம்பிய மலர்களைத் தாங்கி நிற்கின்றன. மத்தளக்காரர்கள் மத்தளத்திலிருந்து ஒலிகளைக் கிளப்புவதுபோலவே, மேகங்கள் இடிமுழக்கம் செய்து நிற்கின்றன. கூத்துப் பார்ப்பவராகக் குவளைக் கொடிகள் உள்ளன. அக் குவளைக் கொடிகளாகிய பார்ப்பவர்கள் மலராகிய கண் ணால் பார்க்கின்றனர் யாழ்ப்பாணர்கள் இனிய ஒலியை

உண்டாக்கி மனத்தைக் களிப்பிப்பதுபோலவே வண்டுகள் இன்னிசையால் ரீங்காரஞ்செய்து நிற்கின்றன.

இந்தக் காட்சிகளை யெல்லாம் கண்டு களித்துக் கொலு வீற்றிருக்கிறது மருதத்திணை அரசு. கம்பர் தரும் காட்சியைப் பாடலில் காண்க.

தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட மருதம்வீற் றிருக்கு மாதோ?

— கம்பராமாயணம் (நாட்டுப் படலம்)

[ தண்டலை - சோலை; கொண்டல்கள் - மேகங்கள் முழவின் - மத்தளம் போல; ஏங்க - ஒலிக்க; தெள்திரை - தெண்டிரை; தெளிவான அலை; எழினி - நாடகத் திரைச் சீலை; தேம்பிழியாழின் - இனிமை (உள்ள) தேன்(போன்ற இனிய) வீணை(ஓசை) போல]

செய்யுளை ஒரு முறைக்குப் பலமுறை இசையுடன் படித்து அனுபவிக்குங்கால், காட்சிகள் யாவும் நமது மனக்கண் முன் வந்து நிற்கின்றன அல்லவா?

# தேரையின் தாலாட்டு

'நெஞ்சிற் பதிவு செய்யச் செஞ்சொற் கவியே சிறந்தது' என்று கூறுகின்றார் புலவர் சகவீர பாண்டியனார் அவர்கள். கவியின்பம் கலையறிவில் கனிந்து விளையும் ஒரு ஆற்றல். செய்யுள் சுருங்கிய சொற்களால் பெரும் பொருளை அமைத்து, இன்னோசை கலந்து செய்யப்பட்டுள்ளமையால் கருத்தைக் கவர்ந்து உணர்வுகளை எழுப்பும் ஆற்றல் வாய்ந்தது; அறிவு நிலையைப் பற்றிக் கொண்டுபோய் படிப்போரின் உணர்வு நிலையைக் கிளப்பிவிடும்.

உரைநடை கருத்தைத் தெரிவிக்கும் கருவியாக இருந்தாலும், அதற்கு உணர்வு நிலையைத் தொடுவதற்கு அவ்வளவு ஆற்றல் இல்லை. அது பெரும்பாலும் அறிவு நிலையைப் பற்றித்தான் நிகழும். என்றாலும், செஞ்சொற்கள் பெய்து எழுதப்பட்ட நடையுள்ள உரைநடைக்கும் படிப்போருக்கு மெய்மறதியைக் கொடுக்கவல்ல ஆற்றல் உண்டு.

இயற்கையிலேயே பசுவின் பாலுக்கு சுவையுண்டு. அதை வற்றக் காய்ச்சி, கட்டியாகத் திரட்டி, அதில் சீனியையும் கலந்து உண்பவர்களுக்கு அது மிகுந்த சுவையைக் கொடுக்கிறது. நன்றாக விளைந்த கரும்பைப் பிழிந்த சாற்றை உண்டால், அதுவும்

இனிமையாக விருக்கும். என்றாலும், அதை நன்றாகக் காய்ச்சி, சர்க்கரைக் கட்டியாக எடுத்து உண்டால், இன்னும் அதிக இனிமையைப் பெற்றிருப்பது தெரிய வரும். பசுப்பாலும் கருப்பஞ்சாறும் மிகுதியாக நீரைக் கொண்டிருத்தலால் அவற்றின்கண்ணுள்ள சுவையும் மிகுந்து தோன்றாது குறைந்தே காணப்படுகிறது. இவற்றைப்போலவே, உரைநடையும் ஒரு எல்லைக்குட் படாமல் சொற்பெருக்கமுற்று நடைபெறுவதால், அதனால் தெரிவிக்கப்படும் பொருள் அச்சொற்களுடன் கலந்து மெல்லிதாகி விடுகிறது. ஆனால் செய்யுள் எழுத்து, சொல், அசை, சீர், அடி முதலிய வரம்புக்குட் பட்டுச் சொற் சுருக்கமுடன் நடைபெறும்போது அதனால் தெரிவிக்கும் பொருளும் திட்பமும் ஆழமும் உடையதாகின்றது.

இவற்றை யெல்லாம் நன்கு உணர்ந்தவர்கள் பாவலர்கள். ஆகவே, அவர்கள் தங்களது கருத்துக் களை யெல்லாம் செஞ்சொற் கவிகளில் பொதிந்து வைத்திருக்கின்றனர். சங்ககாலக் கவிஞர்கள் இத்துறை யில் தலை சிறந்தவர்கள். பிற்காலத்துக் கவிஞர்களின் பாட்டுக்கள் அவ்வளவு பொருளாழத்துடன் இல்லா விட்டாலும் கற்பனை நயம் கலந்திருப்பதால், படிப்போ ருள்ளத்தை ஈர்க்கும் ஆற்றல் பெற்றவையாக விருக் கின்றன.

நாடோறும் நாம் காணும் காட்சிகளைத்தான் கவிஞர்களும் காண்கின்றார்கள். நாம் எவ்வளவு சிந்தித்துப் பார்த்தாலும் நமக்கு மாடு மாடாகத்தான்

தோன்றும்; ஆடு ஆடாகத்தான் தோன்றும். அவற்றி விருந்து புதிய கருத்துக்கள் தோன்றுதலில்லை.

கம்பர் போன்ற கவிஞர்கள் இக்காட்சிகளைக் கண்ணுற்றால், அரிய கவிதைகளை உருவாக்கி விடுகிறார் கள்; அவை படிப்போருள்ளத்தைக் கொள்ளைகொள் ளும் ஆற்றல் வாய்ந்தனவாக விளங்குகின்றன.

ஒரு சமயம் கம்பர் வயற்புறமாகச் செல்ல நேர்ந்தது. வயலின் அருகே ஒரு குளம் இருந்தது. குளக்கரையிலும் வயல் வெளிகளிலும் அன்னங்கள் நடந்து செல்வதைக் கண்டார். தாமரை மலர்களில் அன்னக்குஞ்சுகள் இருப்பதைப் பார்த்தார். தூங்கின குஞ்சுகள் விழிப்புக்கொண்டு பசியால் வருந்திக் கீச்சிடு வதைக் கேட்டார். அதேசமயம் அக்குளத்தில் எருமை கள் வந்து படிந்திருந்தன. குளத்தருகிலும் அண்டைப் பக்கங்களிலுமிருந்த தவளைகள் கத்திக்கொண்டிருந்தன இவ்வளவுதான் அவர் கண்ட காட்சிகளும் கேட்ட ஒலிகளும்.

இவற்றை யெல்லாம் ஒன்று சேர்த்துத் தனது கற்பனை நயத்தைக் குழைத்து ஒரு அழகான சொற்பட மாக்கித் தருகின்றார். இம்மாதிரியாகக் கவிஞன் ஒருவன் இயற்கை நிகழ்ச்சிகளைத் தனது கற்பனை தோன்றப் பாடுவதை இலக்கண நூலார் உயர்வு நவிற்சியணி என்று கூறுவார்கள்.

“ வயலில் உழத்தியர்கள் களை பறித்துக்கொண் டிருக்கிறார்கள். அவர்களைப்போல் தாமும் நடக்க

வேண்டுமென்று விருப்பங்கொண்டு அவ்விருப்ப மிகுதி யால் தூங்கக் கிடத்திய தமது குஞ்சுகளையும் மறந்து அங்குமிங்கும் நடந்து நடைகற்றுக்கொண்டிருக்கின்றன அன்னங்கள். குஞ்சுகள் விழித்துக்கொண்டு கத்து கின்றன. அதே சமயம் அங்கு மேய்ந்துகொண்டிருந்த எருமைகளுக்கு வீட்டிலிருக்கும் தமது கன்றுகளின் நினைவு வருகிறது; வரவே, நெஞ்சுருகிக் கனைக்கின்றன. உடனே முலைகளின் வழியாக மடியில் சுரந்திருந்த பால் பீறிட்டுச் சொரிகின்றது. பசியால் வாடிய அன்னக் குஞ்சுகள் மகிழ்ச்சியுடன் பாலைப் பருகுகின்றன. வயிறு நிறையக் குடித்துப் பின்னர்த் தூங்குகின்றன. அதே சமயம் தவளைகள் கத்திய ஒலிகள் அன்னக்குஞ்சு களுக்குத் தாலாட்டுப்போல் இருந்ததால், அவை மெய் மறந்து உறங்குகின்றன " எனக் கற்பனை நயத்துடன் கவிதை யொன்றைப் புனைந்து விடுகிறார் கம்பர். அவர் கவிதை வருவாறு ;—

சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்ட துயிலப் பச்சைத் தேரைதா லாட்டும் பண்ணை

— கம்பராமாயணம் (நாட்டுப்படலம்)

[சேல்உண்ட - சேல் என்னும் மீனையொத்த; ஒண்கணார் - ஒளியையுடைய கண்களையுடைய மகளிர்; மால் உண்ட - பெருமை பொருந்திய, நளினப்பள்ளி - தாமரை மலர்ப்படுக்கை; வளர்த்திய - கிடத்திய; கால் உண்ட - கால் சிக்குண்ட; சேற்றுமேதி - சேற்றை யுடைய எருமை; துயில - தூங்க; பச்சைத்தேரை - பச்சை நிறமுள்ள தேரை; பண்ணை - வயல் ]

# ஓட்டைச் செவியர்

ஆங்கில மொழி பயின்று அம்மொழியிலுள்ள இலக்கியங்களைப் படித்து இன்பம் நுகர்ந்தவர்கள் மில்டனையும் (Milton) செகப்பிரியரையும் (Shakespeare) நன்கு அறிவார்கள். நமது நாட்டில் படியாதார் முதல் பாவலர் வரையிலும் கம்பரை அறிந்துள்ளதுபோல் மேல் நாட்டில் மில்டனையும் செகப்பிரியரையும் அறிந்திருக்கிறார்கள். இவர்களில் செகப்பிரியர் எழுதியுள்ள நாடகங்களும் மில்டன் எழுதியுள்ள பெருங்காப்பியங்களும் தனிப்பாடல்களும் தலை சிறந்தவை.

மில்டனின் உம்பருலக நீக்கம் (Paradise Lost) ஆங்கில மொழி உள்ள அளவும் நிலைத்து நிற்கும் ஒரு திப்பியகாப்பியம். அதனை எழுதத் தொடங்கிய வரலாறு மில்டனது தாய்மொழிப்பற்றைக் காட்டுகிறது. கிரேக்க மொழியிலுள்ள இலியட் (Iliad) டைப் போலவும், ஒடிஸ்ஸி (Odyssey) யைப் போலவும் தான் ஒரு நூல் எழுதவேண்டும் என்றும், அதைத் தனது தாய் மொழியாகிய ஆங்கிலத்திலேயே எழுதி அம்மொழியின் நிலையை உயர்த்தவேண்டும் என்றும், இன்பக்கனு ஒன்று கண்டார். இதனைப்பற்றி எழுதலாம் எனப் பல நாட்களாகச் சிந்தித்துக்கொண்டிருந்தார். கடைசியில் "மனிதன் வீழ்ச்சி" (The fall of

பாப். பாடுவதில் தேவரையும் மிஞ்சிவிட்டார். பல இடங்களில் திருக்குறட் கருத்தை அமைத்ததோ டல்லாது, குறள் மணிகளை அப்படியே பதித்தும் வைத் திருக்கிறார். பல இடங்களில் உலக அனுபவத்தை யொட்டிப் பல அணிகளை அமைத்திருக்கிறார். காப்பியப் போக்குப் படிப்போருக்கு மெய்மறதியை உண்டாக்கு கிறது. "விருத்தமெனும் ஒண்பாவில் உயர் கம்பன்" என்று பிற்காலப் பாவலர்களால் பாராட்டப்பட்டிருக் கிறார். உலகியலறிவு செறிந்த அணியொன்றை எவ் வாறு அமைத்திருக்கிறார் என்பதை ஈண்டு எடுத்துக் காட்டுவாம்.

வேள்வி செய்யுங்கால் அரக்கர்களால் இடையூறு யாதொன்றும் விளையாதிருக்க விசுவாமித்திரர் இராம இலக்குவர்களை உதவியாகப்பெற்றுச் செல்லுகிறார். முதலாவதாக அவர்கள் தாடகையைச் சந்திக்கிறார்கள். பெண் என்று கருதாது தாடகையைக் கொலை செய்ய வேண்டுமென்று முனிவர் அறிவுறுத்துகிறார். இராமன் அரக்கிமீது அம்புமாரி பொழிகிறான். கடைசியில் இராமனம்பு ஒன்று தாடகையின் மார்பைத் துளைத்துச் செல்லுகிறது. அம்பு மார்பைத் துளைத்துச் செல்வதைப் பாவலர் உவமை ஒன்றால் விளக்கிக் காட்டுகிறார். இது பாவலரின் உலகியலறிவையும், மக்களது தன்மையைக் கூர்ந்து ஆராயும் மதிநுட்பத்தையும் காட்டுகிறது. உவமையை எடுத்துக்காட்டும் அவரது திறமையும் இதிலிருந்து தெரியவருகிறது.

இலக்கண விதிப்படி உவமையாக எடுத்துக்

man) அவரது நினைவினைக் கவர்ந்தது. அதனையே பொருளாகக் கொண்டு உம்பருலக நீக்கத்தை எழுதி முடித்தார். அவரது கனவும் நனவாயிற்று.

கிரேக்கப் பாவலராகிய ஓமர் (Homer) நாளி லிருந்து மேநாட்டுப் பாவலர் தமது காவியங்களை உவமை அணிகள் பூட்டி அழகு செய்து வரலாயினர். இவற் றைப் பொதுவாக 'பெருங்காப்பிய உவமைகள்' (Epic similes) எனக்குறிப்பிடுவது வழக்கமாய்ப் போயிற்று. மில்டன் தனது உம்பருலக நீக்கத்தில் இத்தகைய உவமைகளை ஏராளமாகக் கையாண்டிருக் கிறார். நூலைப் படிப்போருக்கு அவை ஒரு சிந்தனை விருந்தாக விருக்கும்.

மில்டனைப் போலவே நமது நாட்டிலும் திருத் தக்கதேவர் 'சிந்தாமணி' யையும், இளங்கோவடிகள் 'சிலப்பதிகார' த்தையும், சீத்தலைச் சாத்தனார் 'மணி மேகலை' யையும் கம்பர் 'இராமாயண' த்தையும் பாடி யிருக்கிறார்கள். இப்பெருங்காப்பியங்கள் அவ்வும்ப ருலக நீக்கத்திற்கு எள்ளளவும் இளைத்தனவல்ல. இவைகளிலும் பல இனிமையான உவமை அணிகளும், ஏனைய அணிகளும் அமைந்து காவியங்களை அழகு படுத்தி நிற்கின்றன. இக்காப்பியங்களைப் படித்து மில்டனின் காப்பியத்துடன் ஒப்பு நோக்கினால் இவற்றி னது பெருமை விளங்கும்.

கம்பர் இராமாயணத்தைப் பாடுவதற்குச் 'சிந்தாமணியை' உதவியாகக் கொண்டார். விருத்தப்

காட்டப்படும் பொருள் உவமிக்கப்படும் பொருளை விடப் பன்மடங்கு உயர்ந்ததாக இருத்தல் வேண்டும். அஃதாவது உவமிக்கப்படும் பொருள் உவமானப் பொருளைவிடத் தாழ்ந்ததாக இருக்கவேண்டும். 'புலி போல் பாய்ந்தான்' என்ற சொற்றொடரில் புலி உவமப் பொருள்; மனிதன் உவமிக்கப்படும் பொருள். மனிதனின் பாய்ச்சலைவிடப் புலியின் பாய்ச்சல் பன்மடங்கு மிகுந்தது. ஆகவே புலி பாய்கிறதுபோல் மனிதன் பாய்ந்தான் என்று சொன்னால் அது மனிதனின் பாயுந் திறமையை மிகுதிப்படுத்திக் காட்டுகிறது. இம்மாதிரியாக உவமை அமைதல் வேண்டும்.

கம்பர் இராமனது அம்பை முனிவரது சொல்லுக்கு உவமையாகக் கூறுகிறார். 'சொல் ஒக்கும் கடிய வேகச்சுடுசரம்' என்பது அவரது வாக்கு. அரிய தவசிகள் அருள் புரிந்து சொன்னாலும், வெகுளி கொண்டுக் கூறினாலும் வாழ்வும் வீழ்வும் தவறாது விளையும் என்பது ஆன்றோர் கொள்கை.

வாய் திறந்து சொல்லுவதில் முனிவர்களுக்கு யாதொரு வருத்தமும் இல்லை. இருந்தபடி இருந்து நாவசைத்தால் போதுமானது; சொல் பிறந்துவிடுகிறது. எதிரிகள் அழிவினை அடைகிறார்கள். அதுபோலவே இராமனும் மிக எளிதாய் அம்பை விடுகிறான். அது பல வியக்கத்தக்க செயல்களை விளைவிக்கிறது. தாடகை எளிதில் அழிவினை அடைகிறாள்.

முனிவர்களது வாக்கு, இடம், காலம் இவற்றையெல்லாம் கடக்கவல்ல ஆற்றல் வாய்ந்தது. அவர்களது

நிறைமொழி இறப்பு, நிகழ்வு, எதிர்காலங்களிலும் சென்று அவர்கள் எண்ணியதனைச் செய்யும் வல்லமை வாய்ந்தது.

இராமனைக் 'கரிய செம்மல்' என்கிறார் பாவலர். சூல்கொண்ட மழைக்கொண்டல் வண்ணனாகிய இராமனது உடலுக்கு ஏற்ற உவமைதான்.

தாடகையை 'அல் ஒக்கும் நிறத்தினள்' எனக் குறிப்பிடுகிறார். அல் என்பது இருட்டு. தாடகையை இருள் நிறத்தவள் என்று கூறுவது மிகப் பொருந்தும். கொடுந்தொழிலையுடையவர்கள் யாவரும் மிகக் கரிய நிறமுள்ளவர்களாயிருப்பர் என்பது நூலார் கொள்கை. இராக்கதர்கள் தீத்தொழிலையுடையவர்களாதலால் கரிய நிறமுடையவர்கள் என்பது கூறப்படுகிறது.

இராமனது அம்பு தாடகையின் நெஞ்சில் பாய்கிறது. அந்நெஞ்சு அவ்வளவு எளியதா? இல்லை. தசையாலான நெஞ்சுதான்; ஆனால் அங்கு அருள் இரக்கம் முதலிய நற்குணங்களுக்கு இடமே இல்லை. நாள்தோறும் பலமுறையில் கொடுஞ்செயல்களைச் செய்து அவளது நெஞ்சம் வைரம்போல் ஆய்விடுகிறது; அவ்வளவு கெட்டியாக ஆய்விடுகிறது. இதைக் கம்பர் 'வயிரக் குன்றக் கல் ஒக்கும் நெஞ்சு' எனக் குறிப்பிடுகிறார். சரியான உவமானந்தான்.

'அவர்அழுத்தமான பேர்வழி' என்று சொன்னால், ஏனையவர்களின் உடலைவிட அவரது உடல் கெட்டியாக இருக்கும் என்பது பொருள் அன்று.

ஏனையோர் மனதைப்போல் அவர் மனது எளிதில் இளகாது என்பதுதான் பொருள். அதுபோலவே, வயிரக்கல்லைப்போல் தாடகையின் நெஞ்சு கெட்டியாக இருக்கும் என்பது பொருள் அன்று. பொதுவான கல்லைவிட வயிரக்கல் கெட்டியாக இருப்பதைப்போல ஏனைய அரக்கர் உள்ளத்தைக் காட்டிலும் அவள் உள்ளம் கெட்டியானது என்பதே அதன்கருத்து.

"அல் ஒக்கும் நிறம்; கல் ஒக்கும் நெஞ்சு" எப்படிப்பட்ட பொருத்தமான உவமைகள்! புறமும் அகமும் புலன் அறியும்படி தெரியவைக்கிறார். படிக்கும்போதே உள்ளக்கிளர்ச்சி ஏற்படுகிறது.

இத்தகைய அவளது கொடிய மார்பை இராகவனம்பு எவ்வாறு துளைத்தது? இத்தகைய கேள்வி எழுதல் இயற்கை. இதற்குப் பதில் சொல்வதைப் போல் கம்பரது வாக்கு அமைந்திருக்கிறது.

கல்வியறிவில்லாத மூடர்களுக்குக் கல்வியறிவுடைய நல்லோர்கள் நல்லுரை கூறினால் அதை அவர்கள் பிரியமாகக் கேட்டு உணரமாட்டார்கள். ஒரு காதில் வாங்கி இன்னொரு காதில் விட்டு விடுவார்கள். அதுபோலவே இராமன் விட்ட அம்பு தாடகையின் நெஞ்சில் பாய்ந்து விரைவாகி ஊடுருவிப் போய்விடுகிறது. நல்லுரைகள் காதில் பட்டு நெஞ்சில் பதியாது விரைவாய் வெளியில் போய்விடுதல் போலவே, அம்பும் நெஞ்சில் பாய்ந்து சற்றும் தங்காது போய்விடுகிறது: "கல்லாத புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள்

எனப்போயிற்று அன்றே" எனக்கூறுகிறார் கம்பர். சொற்களில் ஓட்டைச் செவியின் நிலையை உணரவைத் திருப்பது உவகை பயக்கிறது.

"கல்லாத புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப்போயிற்று அன்றே" என்பதில் எவ்வளவு புதை பொருள் இருக்கிறது! இச்சொற்றொடரை ஆழ்ந்து பார்க்கப் பார்க்கப் பல உண்மைப் பொருள்கள் வெளிப்படுகின்றன. கம்பரது உலகியலறிவு வெளிப்படுகிறது; மனிதர்களின் இயற்கையைக் கூர்ந்து கவனித்திருக்கும் மதிநுட்பம் தெரியவருகிறது.

சொல் என்பது ஒலிவடிவம்; ஒருவர் சொல்லும் சொல் எவர் காதிலும் எளிதாய் விழும். காதில் சொல் விழுவதற்கு அறிவு தேவையில்லை. அத்தகைய சொல் மூடர் காதிலும் விழும்; ஆனால் அதன் பொருள் அவர்கள் மூளைக்கு எட்டாது. ஆகவே அவர்கள் நெஞ்சில் நற்பொருள் தங்காது ஓடிப்போகும். இதையே கம்பர் சொல் ஒக்கும் சரம் பொருள் எனப்போய்விட்டது என்று குறிப்பிடுகிறார்.

இளமையில் வசதிக்குறைவால் எவ்வளவோ பேர் படிப்பதில்லை. ஆனால் அவர்களில் பலர் நல்லவர்களாக இருக்கிறார்கள்; பலர் தீயர்களாகவும் இருக்கிறார்கள். இக்கல்லாமையோடு தீக்குணமும் தீநடத்தையுமுள்ளவர்களுக்கு நல்லவர்கள் எதைச் சொன்னாலும், அது அவர்கள் நெஞ்சில் தைக்காது. இவர்களைத் தான் "கல்லாத புல்லர்" எனக்குறிப்பிடுகிறார் கவிஞர்.

இதனால் "கல்லாத நல்லவர்களை" விலக்கியிருக்கும் நயம் பாராட்டத்தக்கது.

அங்ஙனமே கற்றவர்கள் யாவரும் ஒழுக்க முடையோர், நல்லோர் என்று சொல்லி விடுதல் முடியாது. படித்தவர்களில் நல்லவர்களும் இருக்கிறார் கள்; தீயவர்களும் இருக்கிறார்கள். கல்வி மனிதனது தீயநடத்தையைத் திருத்தலாம்; இயற்கையிலேயே தீக் குணம் உள்ளவர்கள் இன்னும் பன்மடங்கு தீயவர் களாகவும் ஆகலாம். ஒருவனது அறிவுக்கும் அவனது பண்புக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. மனிதர் களின் செயல்களைக் கூர்ந்து கவனிப்பவர்கள் இதை நன்கு அறிவார்கள். அதனால்தான் கம்பர் படிக்காதவர் களுள் நல்லவர்களை நீக்குவதற்குக் 'கல்லாப் புல்லர்' என்று சொன்னது போலவே, 'கற்றவர்' என்று சொல்லாது, கற்றவர்களுள் தீயவர்களை விலக்க 'நல்லோர்' எனப் பொதுவாகக் குறிப்பிடுகிறார். படிக்காதவர்கள் படித்தவர்கள் என்ற இருகூட்டங்களிலும் 'நல்லோர்' இருப்பதை யாவரும் அறிவார்கள். நல்லவர்களாக இருப்பதற்குப் 'படிப்பு' ஒருவந்தம் இல்லை.

"போயிற்று அன்றே" என்பதில் அன்று, ஏ என்பன அசை மொழிகள். அறியாதவர்கள் அசைக் குப் பொருள் இல்லை எனக் கூறி விடுவார்கள். பாவலர்கள் இந்த அசையில்தான் பல இசைக்குறிப் புப் பொருள்களை வைத்திருக்கின்றனர். 'போயிற்று அன்றே' என்று பலமுறை இசையுடன் சொல்லிப் பார்த்தால், 'அன்றே' என்பதில் உள்ள 'விரைவுக்

குறிப்பு'த் தெரியவரும். அம்பு ஒருகணநேரங்கூடத் தங்காது மிக விரைவில் போயிற்று என்பது பாவலர் பெறவைத்த குறிப்பு; பாவியின் உடலில் கொஞ்ச நேரங் கூடத் தங்கக் கூடாது என்று போனது போல் அம்பு மிகவிரைவாகப் போய்விட்டது என்பது பாவலர் கருதிய பொருள். இதனை வடமொழிப் புலவர் தொனி என்பர்.

தாடகையின் மார்பில் இராமனது அம்பு ஊடுருவிச் சென்ற தன்மையைக் கூறவந்த கவிஞர் ஓட்டைச் செவியரின் நிலையையும் ஒருங்கு உணர வைக்கும் பெற்றி படிப்போருக்கு இன்பம் தருகிறது. கவிஞரின் சொல்லோவியம் வருமாறு ;—

"சொல் ஒக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல் ஒக்கும் நிறத்தி னண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று அன்றே!"

— கம்பராமாயணம் (தாடகைவதைப் படலம், 71.)

[சரம் - அம்பு; அல் - இருட்டு.]

# களை பறிக்கும் காட்சி

மனிதர்கள் அடையும் இன்பங்களுள் செஞ் சொற்கவி இன்பமே தலைசிறந்தது என்பது கற்றுணர்ந் தடங்கிய சான்றோர்களின் கொள்கை. கவிதை இன்பத் தில் திளைத்த மக்கள் இந்த மண்ணுலக இன்பத்தையே மறந்துவிடுவார்கள். சீதாப்பிராட்டியை முதன் முதலாக இராமபிரான் காணும்போது அப்பிராட்டியாரின் அற் புத அழகுப் பிழம்புக்கு உவமையாகக் கவி இன்பத் தையே உரைத்துள்ளார் கம்பர். பொன்னின் சோதி யையும் பூவின் நறுமணத்தையும் தேனினது இனிய சுவையையும் வரிசையாகச் சொல்லிப் பார்த்தவர் அவை களால் நிறைவுறாது கடைசியில் "செஞ்சொற்கவி இன்பம்" என்று உணர்வொளி ததும்ப உரைத்து விருப்பம் நிறைவெய்துகின்றார். கலையறிவில் கனிந்து விளைந்தது கவி இன்பம்.

மக்கள் அன்றாட வாழ்க்கையில் காணும் காட்சி களுள் உழவர்களும் உழத்தியர்களும் நெல் வயலில் களை பறிக்கும் காட்சியும் ஒன்று. நாம் பல தடவை களில் அக்காட்சியைக் கண்டாலும், அது நமது உள்ளத் தில் எவ்விதப் புதிய கருத்தினையும் தோற்றுவிப்பதில்லை. இக்காட்சி கவிஞர் உள்ளங்களில் எவ்விதக்கருத்துக் களைத் தோற்றியிருக்கின்றது என்பதைப் பார்ப்போம்.

"களை பறிக்கச்சென்ற உழவர்கள் வயலில் உள்ள குவளை மலரைப் பார்த்து அவைகளைத் தமது காதலிகளுடைய கண்கள் என்று நினைத்துக் களையாது விட்டனர். அங்குள்ள தாமரையைத் தமது நாயகிகளது முகம் என நினைந்து அதன் அருகிலும் நில்லாது அகன்று போனார்கள். அங்ஙனமே அல்லி முதலிய களைகளையும் பறியாது காதற்பாட்டுக்களைப் பாடிக்கொண்டு காலம் கழித்தார்கள்; காதல் மயக்கம் அதிகமாகி அலைந்து திரிந்தார்கள்" என்று கூறுகிறார் சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவர். அவர் பாட்டு வருமாறு :-

**கண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினார்**
**வண்ணவான் முகம்என மரையின் உட்புகார்**
**பண்ணெழுத் தியல்படப் பரப்பி யிட்டனர்.**
**தண்வயல் உழவர்தம் தன்மை இன்னதே.**

**— சிந்தாமணி 51.**

[*கட்டல் - களைதல்; வான் - அழகு பொருந்திய; மரை - தாமரை.*]

தேவர் போக்கினைப் பின்பற்றிய கம்பரின் உள்ளத்தை இக்காட்சி எங்ஙனம் கவர்ந்திருக்கிறது என்பதைப் பார்ப்போம்.

" பல உழவர்கள் களை பறிக்கச் சென்றார்கள்; அவர்களில் பெரும்பாலோர் இளைஞர்கள். வயலில் இறங்கிக் களை பறிக்கத்தொடங்கியபோது, அவர்களின் மனம் மாறுபட்டது. பயிர்களுக்கு இடையே களை

களாக இருந்தவை யாவும் உயர்ந்த நீர்ப்பூக்களே. அவைகள் தமது காதலிகளுடைய உறுப்புக்களைப்போல் காணப்பட்டன. குவளை மலர்கள் கண்களை யொத்திருந்தன; தாமரைகள் முகங்களைப் போன்றிருந்தன; குமுத மலர்கள் வாயிதழ்கள் போலிருந்தன. ஆகவே உழவர்கள் ஒன்றையும் தொடாது வயலில் உலாவி வீண் பொழுது போக்கினுர்கள்" என்று கூறுகிருர் கம்பர்.

அனுபவ நிகழ்ச்சி யொன்றை உறுதிபெற இக் காட்சியுடன் இணைத்திருக்கும் பெற்றி மிகநேர்த்தியாக விருக்கிறது. புதுமணம் புரிந்த இளைஞர்கள் தம் காதலிகளிடம் பேராவல் உடையவர்களாய்ப் பெருகி நிற்பர் என்பது யாவரும் அறிந்த உண்மை; அம் மங்கையர் மனம் கோணும்படி மறந்தும் அவர்கள் மீறி நடக்க மாட்டார்கள். இந்த உண்மையை உழவர்களின் செயலுடன் ஒப்புச் செய்து உரைத்திருக்கிருர் கம்பர். கம்பர் பாட்டு வருமாறு :—

"பண்கள்வாய் மிழற்றும் இன்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வாய் ஒக்கும் களையலால் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகிலாது உலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்ருல்?"

— கம்பராமாயணம்.

[பண்கள் வாய்மிழற்றும் இன்சொல் - பண்கள் போல இனிமையாக வாயினுற் பேசும் இன்சொற்களையுடைய; கடைசியர் - உழத்தியர்; பரந்து - அகன்று; உண்கள் வார் கடைவாய் - குடிக்கும் கள் ஒழுகா நிற்கும் வாயோரங்களையுடைய; மள்ளர் - உழவர்; நேயம் - அன்பு.]

இவ்வாறு ஓரிடத்தில் அறிந்த ஒரு சிறப்புப் பொருளை உலக மக்கள் அறிந்த அனுபவமான பொதுப் பொருள் ஒன்றுடன் பொருத்திக் கூறுவதை இலக்கண நூலார் 'வேற்றுப் பொருள் வைப்பு அணி' என்று கூறுவார்கள்.

இந்த இரண்டு ஊற்றுகளினின்றும் பரஞ்சோதி முனிவரது கருத்து எவ்வாறு பெருகியிருக்கிறது என்பதைக் கவனிப்போம்.

"உழவர்கள் வயல்களில் புகுந்தார்கள்; பயிர்களுக்கு இடையே கிளைத்திருந்த கமலம், குவளை, குமுதம் முதலிய மலர்கள், அவை தமது காதலிகளுடைய முகம், கண், வாய் முதலிய அவயவங்களைப் போலிருந்தன. என்றாலும், அவ்வொப்புமையைக் கருதாது அவற்றை முற்றக் களைந்தார்கள்." என்று கூறுகிறார் முனிவர்.

முனிவரும் தமது பாட்டுக்கு வேற்றுப் பொருள் வைப்பணி'யைச் சூட்டி அழகு செய்திருக்கிறார். நாட்டை ஆளும் அரசன் ஏவல் வழி நிற்பவர்கள் உறவினர்கள் பகைவராக வந்தால் உறவை நினைத்து அவர்களைத் தண்டிக்காது விடமாட்டார்கள் என்ற

உலகறிந்த. அனுபவத்தைப் பிணைத்து வைத்திருக்கும் பெற்றி உவகை பயக்கிறது. கவிஞர் பாடல் வருமாறு:-

"கடைசியர் முகமும் காலும் கைகளும் கமலம் என்னார்;
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுதம் என்னார்;
அடையவும் களைந்தார் மள்ளர்; பகைஞரா யடுத்த எல்லை
உடையவன் ஆணையாற்றல் ஒறுப்பவர்க்கு உறவு உண்டாமோ?"

— திருவிளையாடல் (திருநாட்டுச் சிறப்பு, 23 )

[ கடைசியர் - உழத்தியர்; என்னார் - கருதாமல்; படைவிழி-வேல் போன்ற கண்கள்; அடையவும்-முற்றவும்; உடையவன் - ஆண்டான், அரசன்; ஒறுப்பவர்க்கு - தண்டிப்பவர்க்கு.]

இம்மூவருடைய பாதைகளை நன்ருக அறிந்திருந்தாலும், தமது பாதையை மாற்றிக்கொண்டார் காஞ்சி புராண ஆசிரியர் சிவஞான முனிவர். மேற்கூறிய மூவரும், உழவர்களைக் காட்டினரேயன்றி உழத்தியர்களைக் காட்டவில்லை. ஆனல் நமது முனிவர் உழவர்களையே காட்டவில்லை; உழத்தியர்களை மட்டிலுந்தான் காட்டுகிருர்.

இவரது பாடல்கள் இலக்கியச் சுவைக்கே ஒரு கருவூலம் போல் இருக்கின்றன. பதினன்கு பாடல்களால் களைபறிக்கும் காட்சியை நமக்குக் காட்டுகிருர். ஒவ்வொரு பாட்டும் படிப்போருக்கு மிக இன்பம் கொடுக்கவல்லதாக இருக்கின்றது.

"இளமை பொருந்திய மயில்கள் வயல் வளத்தைப் பார்க்க வந்தாற்போல உழத்தியர் வந்து வயல்களில் சூழ்கிறார்கள். அவர்கள் தாமரை, அல்லி, குவளை போன்ற களைகளைக் களைந்து எறிகிறார்கள். தமது முகங்களை நீரில் காணுங்கால் முகம் தாமரை போலவும், கண்கள் குவளை போலவும், காணப்படுகின்றன. பறித்த களைகள் மீண்டும் எங்ஙனம் முளைத்தன என வியப்படைகிறார்கள். நீலோற்பலத்தைப் பறித்து அதை முகர்ந்து பார்க்கிறார்கள். அது அம்மலர் தமது விழிக்கு எவ்விதத்திலும் இணையில்லாதிருக்கிறதென்பதை அருகில் அழைத்துக் காட்டுவதுபோல் இருக்கிறது. குனிந்து களைபறிக்கும்போது அவர்கள் அலமரும் விழிகளைத் தம் இனம் எனக்கருதி முகத்தின்மீது பாய்கின்ற மீன்களை எளிதாகப் பிடித்துச் சட்டியில் போட்டுக்கொள்கிறார்கள்" என்பனபோன்ற பல காட்சிகளைக் காட்டுகிறார். இக்காட்சிகளில் நயம் பயக்கவல்ல ஒன்றை மட்டிலும் தருகின்றேன்.

"உழத்தியர்கள் வயலில் படர்ந்துள்ள பாசியாகிய களையைப் பறிக்கக் குனிந்தபோது சிலருடைய கொண்டை அவிழ்ந்து கூந்தல் சிக்குண்டு கையின்மேல் விழுகிறது. இது 'எங்கள் இனத்தைச் சேர்ந்த பாசியை அழிக்காதீர்கள்' என்று சொல்வதுபோல் இருந்தது.

உடனே உழத்தியர் நிமிர்ந்து அழகிய மயிரை வாரி முடித்துக்கொள்கிருர்கள் என்று கூறுகிருர். இக் காட்சியைக் காட்டும் பாட்டு வருமாறு ;-

“சைவலங் களைகுவான் குனியத் தாழ்குழல்
எய்திளம் இனத்தினை 'ஒறேல்மின்' என்பபோல்
கைமிசை விழுந்துசிக் குண்ணக் கால்நிமிர்த்து
ஐயபூங் குழல்முடித் தணைக்கின் ருர்சிலர்”

— காஞ்சிபுராணம் (திருநாட்டுப்படலம், 84.)

[ சைவலம் - பாசி; இதுகருத்து நீண்டிருத்தலால் மகளிர் கூந்தலுக்கு உவமை; ஒறேல் மின் - அழிக்காதீர்கள்; ஐய - அழகிய ]

தேவரும் கம்பரும் உழவர்கள் களை பறியாது நிற்கின்ருர்கள் என்று அகத்துறை அமைத்துப் பாடிஞர்கள். பறியாது நின்றது ஒரு வியப்பே. பாடல் களில் அன்பு நலங்கனிந்த இன்ப உணர்ச்சி துள்ளி நிற்கிறது. பறித்து நிற்பது உலக இயற்கை. இதனை முனிவர் புறத்திணையில் பொருத்தி யுரைத்திருக்கிருர். இதில் ஆற்றல் படிந்த வீர உணர்ச்சி ததும்பி யிருக் கிறது. சிவஞான முனிவர் அகத்தையும் புறத்தையும் கலந்து தருகின்ருர். பல உலக நீதிகளையும் சுட்டிக் காட்டுகிருர். இவர் பாட்டுக்கள் படிப்போருக்குத் தம்மை மறக்கும் நிலையைக் கொடுக்கின்றன.

# ஆனந்த வெள்ளம்

காதலையும் வீரத்தையும் கலைகளாக்கிவிட்டார்கள் தமிழர்கள். காதல் உணர்ச்சி விரவிவரும் நூல்களை 'அகப்பொருள் நூல்கள்' என்றும், 'வீர உணர்ச்சி' விரவிய நூல்களைப் 'புறப்பொருள் நூல்கள்' என்றும் கூறுவார்கள். பெரும்பான்மையான சங்கப் பாடல்கள் இவ்விரண்டு உணர்ச்சிகளைக் கொண்டேயிருக்கும். தமிழ் நாட்டுக் கவிஞர்கள் இவ்விரண்டு உணர்வு நிலைகளை அழகு படுத்திப் பாடிய பாடல்களைப்போல வேறு எந்நாட்டுக் கவிஞர்களும் பாடவில்லை யென்று சொல்லலாம். சங்க இலக்கியங்களை நுணித்து ஆராய்பவர்கட்கு இவ் வுண்மை புலப்படும்.

'காதல்' என்ற சொல்லைக் கேட்டவுடன் அருவருப்புக் காட்டும் மக்களும், 'வீரம்' என்ற சொல்லைக் கேட்டவுடன் பழித்துக்கூறும் மாந்தர்களும் இருக்கின்றார்கள். காதல் என்றால் அழகுடைய நங்கையொருத்தியைக் கூடிப் பெறும் இன்பம் ஒன்றே என்றும், வீரம் என்றால் வலுச்சண்டைக்கிழுத்து வெற்றிகாணும் இழிவான செயலே யென்றும் அவர்கள் கருதினார்கள் போலும்! உயிர் இறைவனை நாடிக் கலக்க விழையும் ஆர்வமும் காதலே; இவ்வுலகில் அனுபவிக்கக்கூடிய பலவகை இன்பங்களையும் வெறுத்தொதுக்கித் துறவு

கொள்ளும் மெய்யறிஞர்களின் துறவறமும் சிறந்த வீரமே. இவற்றை அவர்கள் அறிவாராயின் இங்ஙனம் கூறுர்.

அகப்பொருள் இலக்கணத்தை நன்கு விளக்குவதற்கு "இறையனுர் களவியல்" என்ற ஒரு அரிய நூல் இருக்கிறது. அது மதுரையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானுல் பொருளுக்கு இலக்கணம் இல்லையே யென்று வருந்திய பாண்டியன் பொருட்டுச் செய்யப்பட்ட நூல் என்பது நூலறிஞர்களது கொள்கை. அந் நூலுக்கு உரைவகுத்த நக்கீரர் கருத்துப்படி உலகிலுள்ள மக்களை மூவகையாகப் பிரிக்கலாம். தலையாய மக்கள், இடையாய மக்கள், கடையாய மக்கள் எனப் படுவர் அவர்கள். முதலாவது வகையினர் இணைவிழைச்சு, கோவணத்தை எலி கடிக்கிறதெனப்பூனையை வளர்த்த சாமியார் கதைபோல, சுற்றத் தொடர்ச்சியை உண்டாக்கிக் கொலை, களவு, வெகுளி, செருக்குஎன்பன போன்ற குற்றங்களை உண்டாக்குமென்று முன்னதாகவே அச் சிற்றின்பத்தை வெறுப்பார்கள். இரண்டாவது வகையினர் "பெண்என்பது என்புதோல் போர்த்த ஒரு தசைப்பிண்டம்; பலவித நோய்களுக்கு இருப்பிடம்; அழுக்கு நாற்றம் நிறைந்த கூடு; அழுக்கு நாற்றம் இல்லையென்ருல் பூவும் சாந்தும் ஏனைய அணிகலன்களும் வேண்டாமல்லவா?" என்று பிறரால் உடலின் இழிவு நிலையை அறிந்து சிற்றின்பத்தைத் துறப்பார்கள். மூன்ருவது வகையினர் எந்தவிதத்திலும் சிற்றின்பத்தை விடார். அவர்கள் பொருட்டுதான் அகப்பொருள் நூல்கள் எழுந்தன. அவர்களையும் பேரின்பப்பாதைக்குக்

கொண்டு செல்வது அறிஞர்களின் கடமை. அவர்களை அவர்கள் விரும்பும் சிற்றின்ப வயத்தவர்களுக்கிப் பேரின்பத்தைக் கோடிகாட்டி அவர்கள் ஆவலுடன் விழைவும் அமையம் பார்த்து அவர்களை அவநிலையினின் றும் நீக்கித் தவநிலைக்குக் கொணர்ந்தால் அவர்களும் நல் வழிப்படுவார்கள். இவர்களை வஞ்சித்து நல்வழிப் படுத்த உதவுவதால் இந்நூலைக் களவியல்' என்று பெயரிட்டார்கள்.

கசப்பான மருந்தை உண்ணுவதற்கு இனிப்புக் கலந்து தருவது மருத்துவர்களின் கைதேர்ந்த முறை. கொயினாமாத்திரை சர்க்கரைப் பாகு தடவிச் செய்யப் படுவது அனுபவத்தில் காணும் ஒரு நிகழ்ச்சி. செடி கொடியுலகில் ஒரு பூவிலுள்ள பூம்பொடி பிறி தொரு பூவை அடைதலால் காய்க்கும் காய்கள் நனி சிறந்திருக்கும் என்பது செடிகொடி அறிஞர்கள் வெளி யிட்ட உண்மை. இம்மாதிரி கலப்புப் பூம்பொடிச் சேர்க்கை பூச்சிகளாலும் வண்டுகளாலும் நடைபெறு கின்றது. இவ்வண்டுகளைக் கவர்வதற்குப் பூக்கள் பல வித வண்ணங்களையும், மணத்தையும் கொண்டிருத் தலுடன் அப்பூச்சிகளின் உணவாகிய தேனையும் கொண் டிருக்கின்றன. அது போலவே கடையாய மக்களைக் கவர்ச்சி செய்வதற்காகத் தான் அறிஞர்கள் தம் பாடல் களை இன்பம் கொடுக்கவல்ல அகப்பொருளின் சுவை கலந்து பாடியிருக்கிறார்கள்.

திருக்கோவையார் என்பது மாணிக்கவாசக சுவாமிகளால் செய்யப்பட்ட நேனூறும் செஞ்சொற்களால் அகப்பொருள் சுவையைக் குழைத்து செய்யப்பட்ட பாக்களாலானது. சிற்றின்பத்தைக் காட்டிப் பேரின்பப்பேற்றை அளிக்கவல்ல ஒரு அரிய நூல். மேம்போக்காகப் பார்ப்பவர்களுக்குச் சிற்றின்பம் தருவதாகக் காணப்பட்டாலும், ஊன்றிப் படிப்பவர்கள் பேரின்பம் பயக்கவல்ல ஆற்றலை உணர்வார்கள். இறையும் உயிரும் கலப்பதைத்தான் தலைவன் தலைவியர் கூடும் கூட்டமாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. இத்தகைய சிறப்புப்பெற்றிருப்பதால்தான் திரு என்ற அடைமொழியை முதலிலும், 'ஆர்' என்ற சிறப்புப் பொருள் உணர்த்தும் இறுதி நிலையைக் கடைசியிலும் பெற்றுத் 'திருக்கோவையார்' என்று வழங்கப்படுகிறது.

களவு ஒழுக்கம் கழிந்தபின்பு தலைவி கற்பொழுக்கத்தில் ஒழுகி வாழ்ந்து வருகிறாள். ஒருபோது செவிலித்தாய் தலைவியைப் பார்ப்பதற்குச் சென்றிருந்தாள். காதலர்களின் இன்ப வாழ்க்கையை நேரில் கண்டறிகிறாள். இதனைத் தலைவியின் நற்றாய்க்குக் கூறுகிறாள்.

"அவர்கள் இருவரும் இன்பவெள்ளத்தில் அழுந்தியிருக்கின்றார்கள். பேரின்ப வெள்ளத்தில் அழுந்தியிருக்கின்ற ஓர் உயிர் அப்பேரின்பத்தை ஒருடம்பால் அனுபவிப்பதில் அமைதிகொண்டு விருப்பம் நிறைவுறாமல் இரண்டு உடம்புகளால் அனுபவிப்பதை ஒக்கும் அவர்கள் அனுபவிக்கும் இன்பம். அன்றியும், தில்லையில் எழுந்தருளியுள்ள ஒலிக்கும் கழலையுடைய

அம்பலத்தானது அருளைப் பெற்றவர் அடையும் உலப்பிலா இன்பம்போல, அவர்கள் ஆழ்ந்துள்ள இன்ப வெள்ளமும் ஒரு காலத்திலும் குறையாது'' என்று அறிவிக்கிறாள். அதற்குச் செய்யுள்:

"ஆனந்த வெள்ளத்து அழுந்துமோர் ஆருயிர் ஈருருக் கொண்டு
ஆனந்த வெள்ளத் திடைத் திளைத்தால் ஒக்கும் அம்பலஞ்சேர்
ஆனந்த வெள்ளத் தறைகழலோன் அருள் பெற்றவரின்
ஆனந்த வெள்ளம் வற்றுது முற்றுது இவ்வணி நலமே"

— திருக்கோவையார், 307.

[ஈருருக்கொண்டு - இரண்டு உருவங்களைக் கொண்டு; திளைத்தல் - அனுபவித்தல்; அம்பலம் - திருச்சிற்றம்பலம் எனவழங்கும்சிதம்பரம்; அறைகழல்-ஒலிக்கின்ற கழல்களையுடைய; வற்றுது-குறைவுபடாது; முற்றுது-முதிராது.]

# உயிர்ப்படகு

ஆழம் அறியமுடியாதது கடல்; பேராபத்துக்களை விளைவிக்கும் இடம். கடற்பிரயாணம் செய்யும் போது தப்பி விழுந்தவர்கள் தப்புதல் அரிது. நீந்தத் தெரிந்தாலும் எவ்வளவு தூரம்தான் நீந்திச்செல்ல முடியும்? பெரிய பெரிய அலைகள் எழும்போது கடலில் நீந்தமுடியுமா? கால் அயரும்போது ஏதாவது மிதக்கும் பொருள் ஒன்று கிடைத்தால் அதைப்பற்றிக் கொண்டாவது சற்று ஓய்வு எடுத்துக்கொள்ளலாம். அவ்விதப் பற்றுக்கோடு ஒன்றும் இல்லாவிட்டால் கடலில் விழுந்தவரது தொல்லையைச் சொல்லமுடியாது.

சாதாரணமாகக் காற்றில்லாதபோதே கடலில் பெரிய அலைகளுக்குக் குறைவில்லை. பெரிய புயற்காற்று வீசும்போது அலைகளுக்குச் சொல்லவேண்டுமா? புயற் காற்றில் கடற் பிரயாணம் செய்யும்போது கப்பல் ஏதாவது பாறையில் மோதி உடைந்துவிட்டால், அதில் பிரயாணம் செய்பவர்களின் நிலையை வார்த்தைகளால் எடுத்துக்காட்ட முடியுமா? உடைந்த மரத்துண்டுகளைப் பற்றிக்கொண்டு ஒருவர் இருவர் தப்பித்துக்கொள்ள முயற்சித்தாலும், கடலில் வாழும் சுறு, திமிங்கலம் போன்ற பெரிய மீன்கள் சும்மா விடுமா? அப்படியே ஆளை விழுங்கும் பிராணிகள் அல்லவா அவைகள்?

இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் மக்கள் உயிர் தப்ப 'உயிர்க்கச்சைகள்' (Life-belt) கப்பலில் வைக்கப்பட்டிருக்கும். மக்கள் அவற்றை இடுப்பில் மாட்டிக் கொண்டு மிதந்துகொண்டிருப்பார்கள்; சில உயிர்ப் படகுகளையும் கப்பலில் வைத்திருப்பதுண்டு. அவற்றி லும் சிலரை ஏற்றிக் கரைசேர்ப்பார்கள் மாலுமிகள். இவ் விபத்தை கம்பியில்லாத் தந்திமூலம் அறிந்து வேறு கப்பல் ஒன்று அங்குவந்து ஆபத்தில் சிக்கிய மக்களைக் காப்பாற்றுவதும் உண்டு.

மாணிக்கவாசகர் போன்ற உள்ளொளி பெற்ற பெரியார்கள் பிறவியையே ஒரு பெருங் கடலாக உருவகம் செய்திருக்கிறார்கள். உலகிலுள்ள கடலுக்குக் கரையிருக்கிறது; இப்பிறவிக் கடலுக்குக் கரையில்லை. ஆகவே, பிறவி 'பெருங்கடல்' எனக்குறிக்கப்படுகிறது.

முன்னைப் பிறப்பு பின்னை வரும் பிறப்புக்குக் காரணமாகயிருக்கிறது; பின்னால் வரும் பிறப்பு முற் பிறப்பின் காரியமாக இருக்கிறது. இங்ஙனம் பிறப்புக் கள் தொடர்ந்து வரும் என்று சித்தாந்த நூல்கள் கூறு கின்றன. உயிர் வீட்டு நிலை அடைகிற வரையிலும் பிறப்புக்கள் தொடர்ந்து வந்துக்கொண்டேயிருக்கும். ஆகவே, பிறப்பாகிய இக்கடலுக்குக் கரையில்லை என்று சொல்லலாம்; பிறப்பாகிய கடல் அகலத்திலும் ஆழத் திலும் வளர்ந்துகொண்டே செல்லும். பிறவிக்கடலில் வீழ்ந்தவர்கள் தப்பித்துக் கரையேறுதல் அருமையா தலால், பிறவியைப் பெருங்கடல் என்று உருவகம் செய் துள்ளார்கள் பெரியோர்கள்.

இப்பிறவிப் பெருங்கடலில் பெரிய அலைகளும் இருக்கின்றன; சிறிய அலைகளும் இருக்கின்றன. பிறவியில் வீழ்ந்து உயிர் அனுபவிக்கும் தீவினைப்பயன்கள் யாவும் பெரிய அலைகள்; நல்வினைப்பயன்கள் யாவும் சிறிய அலைகள். நல்வினைப்பயன்கள் இன்பம் அனுபவிக்கக் காரணமாக இருந்தாலும், சிறிது காலத்திற்குள் அழியுந்தன்மை வாய்ந்தவை. தவிரவும், அவை மீண்டும் உயிர் பிறப்பதற்குக் காரணமாகவும் இருக்கின்றன. ஆகவே, கானல் நீர்போல் தோன்றும் அவற்றையும், அறிஞர்கள் துன்பங்களாகவே கருதுகிறார்கள். இங்ஙனம் உயிர் பேரலைகளாகிய துன்பங்களாலும், சிற்றலைகளைப்போல் விரைவில் அழியும் தன்மை வாய்ந்த இன்பங்களாலும் அலைக்கப்படுகின்றது. இவ்வாறு அலைக்கப்படுங்கால் அதற்குப் பற்றுக்கோடு ஒன்றும் இல்லை.

சாதாரணமாக நீருக்கே நெகிழுந்தன்மை உண்டு. கடல் அலைகளின் நெகிழுந்தன்மை அளவு கடந்தது. காற்று துணைபுரியுமானால் அலைகளின் கடுமையைச் சொல்லவேண்டியதில்லை. மாணிக்கவாசகர் பெண்களைக் காற்றாக உருவகம் செய்கிறார். உயிர் பிறப்பின் வாய்ப்பட்டு முன்செய்த வினையின் பயனை அனுபவிக்கும்போது உயிரை வந்தடையும் புதிய கருமங்களில் பெரும்பாலும் பெண்களைப் பற்றியே நிகழும். கொவ்வைப் பழத்தை யொத்த உதடுகளினின்றும் பிறக்கும் சொற்களில் பெரும்பாலோர் மயங்கிவிடுவது கண்கூடு. ஆகவே பெண்களைக் கனியை நேர் துவர் வாயார்' என்கிறார்.

பெண்ணுருவத்தில் மயங்குகிறவர்கள் யாவரும் காமச்சேற்றில் சிக்கிக்கொண்டு அல்லற்படுவது அனுபவவாயிலாக அறியலாம். எடுத்துக்காட்டுகள் எவ்வளவு வேண்டுமானாலும் இன்றைய உலகில் காணலாம். இத்தகைய கொடிய காமத்தை சுறாமீனாக உருவகிக்கிறார் மணிவாசகர். கடலிலுள்ள சுறாமீன் தன் வாய்ப்பட்டாருடைய ஊனுடலை மட்டிலும் தான் உண்ணும்; உயிரை ஒன்றும் செய்யாது; செய்யவும் முடியாது. ஆனால் காமம் என்கிற சுறாமீன் ஊன் உடலுடன் உயிரையும் சேர்த்து உண்ணும். அதனால் அதை வான்சுறவு என்று குறிப்பிடுகிறார். அதாவது காமமானது தீவினையாக நின்று வருகிற பிறப்புக்கள் தோறும் உயிரைத் துன்புறுத்தி வரும் என்பது உள்ளொளி பெற்றவர் கண்ட உண்மை.

பொதுவாக எல்லாப் பொருள்களின் மீது செல்லும் ஆசையைக் காமம் என்று குறிப்பிடுவது வழக்கம். என்றாலும், பெண்களைப்பற்றிக் குறிப்பதையே சிறப்பாகக்கொள்வார்கள் அறிஞர்கள். பெண்ணாசை காரணமாகத்தான் ஏனைய பொன்னாசையும் மண்ணாசையும் நிகழ்கின்றன.

இவ்வாறு மாணிக்கவாசகர் அலையால் மோதப்பட்டுக், காற்றால் கலக்குண்டு, சுறவின் வாய்ப்பட்டு, எப்படித் தப்பி உய்வது என்று எண்ணிய வண்ணம் இருக்கிறார். காமச்சுறா சிறிது விழுங்கியும் முழுதும் விழுங்காதிருக்கும் சமயத்தில் திருவருள் துணையால் ஐந்தெழுத்துத் தெப்பம் — உயிர்ப்படகு — அவருக்குக்

கிடைக்கிறது. அந்த ஏமப்புணையைத் தொட்டதும் காமச்சுறுவின் ஆற்றல் குறைந்து விடுகிறது.

இறைவன் கருணையால் தனக்கு உயிர்ப்படகுக் கிடைத்தாலும், அதனைச் செலுத்திக் கரையை அடைவதற்கு வேண்டிய அறிவு, ஆற்றல் முதலியவை தனக்கு இல்லை என்பதை நெஞ்சு திறந்து தெரிவிக்கிறார்; ஒரு அழகான பாடல் வாயிலாக. அப்பாடல் வருமாறு :

"தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயார் என்னுங் காலாற்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதல்அந்தம் இல்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே"

— திருவாசகம் (திருச்சதகம், 27.)

[பௌவம் - கடல்; எவ்வம் - துன்பம்; திரை - அலை; எற்றுண்டு-அலைக்கப்பட்டு; கனியைநேர்துவர்வாயார் - கொவ்வைப்பழத்தை யொத்த சிவந்த வாயினையுடைய மகளிர்; காலால் - காற்றால்; அஞ்செழுத்து - பஞ்சாட்சர மந்திரம்; புணை - தெப்பம்; மல்லல் கரை - முக்திக கரை.]

பாட்டு இலக்கியச் சுவையை உணர்வார்க்கும் அணி நலம் காண்பார்க்கும் ஒரு சிறந்த விருந்தாக இருக்கிறது. உவமைகள் கண்ணாடியில் காண்பவை போலிருக்கின்றன. பாட்டை உரிய இசையில் பாடினால் உள்ளத்தில் தெய்வீக உணர்வு எழுவதை அறியலாம்.

## செவியுணவு

கோடைக்காலம். எங்கும் ஒரேவெயில். கோடைக் கால வெயிலின் கொடுமையைத் தாங்கமுடியாது. வெயிற்காலத்தில் ஆடுமாடுகள் மேயும் புல் வெளிகளில் புல் காண்பது அரிது. புல் வெளி ஒரே ' சுடுகாடாக த் தான் தோன்றும். இத்தகைய புல்வெளிகளில் ஆடுகள் அலைந்து திரிந்து தேய்ந்த புற்கட்டையை ஒரு சிறிது மேயலாம்; மாடுகள் மேய்வது மிகக்கடினம்.

ஒரு நாள் நடுப்பகலில் அலைந்து திரிந்த எருமைக் கடா ஒன்று இரை கிடைக்காது ஒரு குளத்திற்கு வந்து சேர்ந்தது. அதற்கு ஒரே பசி; தண்ணீர்த் தவிப்பும் கூட. குளத்தில் குவளைக்கொடிகள் ஏராளமாக இருந்தன. பொதுவாக எருமைகளுக்குத் தண்ணீரில் இருக்க மிக விருப்பம். அத்துடன் அதற்கு வேண்டிய உணவும் அத்தண்ணீரிலிருந்துவிட்டால் அதன் மகிழ்ச்சி யைச் சொல்லவும் வேண்டுமா? தண்ணீரையும் பச்சைப் பசேலெனக் கிடந்த குவளைக் கொடிகளையும் கண்ட வுடனே எருமைக் கடாவுக்கு அளவுகடந்த ஆர்வம் உண்டாய்விட்டது. ஆர்வத்துடன் குளத்தில் இறங் கிற்று. அதன் பசி அதற்கல்லவா தெரியும்? அழகுடன் மலர்ந்துள்ள பூங்கொத்துக்களடங்கிய குவளைக்கொடி யைப் பேராவலுடன் வாய் நிறையக் கௌவி எடுத்தது.

அதே வேளையில் தேன் எடுக்க ஒரு தேனீக் களின் கூட்டம் அப்பூங் கொத்துக்களில் மொய்த்துக் கொண்டிருந்தது. கடாவின் கலாட்டா' வால் தேனீக் கூட்டம் 'ஞொய்' என்ற ஒலியுடன் குபீரெனப் பறந் தது; தேனீக்களின் ஒலி கடாவின் செவியில் புகுந்தது; அதற்குச் செவியுணவு கிடைத்தது. அதன் சுவையில் அப்படியே ஒன்றிப்போய் விட்டது. அதனைத் தவிர அதன் இன்பத்தை யாரறிவார்? பசியும் பறந்துவிட் டது. கௌவிய குவளைக் கொடிகளை மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல்' சிலையுருவம்போல் நின்றது எருமைக்கடா. அது நின்ற காட்சியை நோக்கினால் 'செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்' என்று வள்ளுவர் கூறியுள்ளதை எருமைக்கடாவும் தெரிந்துகொண்டதோ என்றுகூட நினைக்கவேண்டி யிருக்கிறது.

புகழேந்தி ஒரு சமயம் இத்தகைய காட்சியைக் கண்டார். எருமையின் காட்சி அவர் மனத்தைக் கவர்ந்துவிட்டது. அழகு பொருந்திய குவளை மலர் களின் காட்சியும் வெயிலில் அலைந்து திரிந்துவிட்டு வந்த எருமைக்கடா அதை ஆர்வத்துடன் கௌவி நின்ற மாட்சியும், இந்தக் 'கலாட்டா' வால் உச்சநிலை யில் "ஞொய்" என்ற ஒலியுடன் குபீரெனக் கிளம்பிய வண்டுகளின் இசை ஒலியும் பாவலரின் கருத்தைக் கவர்ந்தன. இந்தக் கருத்தை அப்படியே ஒரு வெண் பாவில் வைத்துத் தீட்டிவிட்டார்.

அந்தக் காலத்தில் பெண்கள் தாமாகத்தான் காதலர்களைத் தேடிக்கொண்டனர். அதனால்தான்

அத்தகைய முறைக்குச் 'சுயம் வரம்' எனப் பெயர் வழங்கலாயிற்று. தமயந்தியின் சுயம் வரத்திற்கு ஐம்பத்தாறு நாட்டு அரசர்களும் வந்திருந்தனர். இவர்களைத் தவிர தமயந்தியை அடையும் பொருட்டு நளன் உருக்கொண்டு இந்திரன், அக்கினி, இயமன், வருணன் என்றி நான்கு தேவர்களும் வந்திருந்தனர். தோழி உலகியலறிந்தவளாதலால், அரசர்களின் தன்மைகளையெல்லாம் உள்ளபடி உணர்ந்து உணர்த்திக்கொண்டே வருகின்றாள். முதலில் தமிழ் நாட்டு அரசர்களை ஒவ்வொருவராக அறிமுகப்படுத்துகிறாள். பிறகு வடநாட்டு அரசர்களை உணர்த்துகிறாள். அவந்தி நாட்டரசனை அறிமுகப்படுத்துங்கால், எருமைக்கடாவின் காட்சி நமக்குக் காட்டப்படுகிறது.

'அவந்தி நாடு ஒரு சிறந்த நாடு. அந்நாட்டில் எருமைக்கடாவும் இசையின்பத்தில் தன்னை ஒன்றுபடுத்தும் தன்மை வாய்ந்தது. அத்தகைய நாட்டிற்கு ஆண் யானை போன்ற அரசர் இவர்' என்று தோழி தமயந்திக்கு அறிமுகம் செய்து வைக்கிறாள். தோழியின் கூற்றாகப் பாவலரின் சொல்லோவியம் வெளிப்படுகிறது. இதோ அவ்வோவியம்.

"வண்ணக் குவளை மலர்வவ்வி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்தப் பைங்குவளை — உண்ணாது
அருங்கடா நிற்கும் அவந்திநா டாளும்
இருங்கடா யானை இவன்"

— நளவெண்பா.

[வண்ணக்குவளை - அழகுபொருந்திய குவளை; வவ்வி - வாயாற் கவ்வி; எடுத்த-உயர்த்திப்பாடிய; பண்ணில் - பாட்டில்; நிற்கும்-மௌனமாக நிற்கும்.]

படத்தில் எருமைக்கடாவும் காட்சியளிக்கிறது. வாயுணவை நாடித்திரிந்த எருமைக்கடாவுக்கு எதிர் பாராத வகையில் செவியுணவு கிட்டுகிறது. சுவை மிகுதியையுடைய செவியுணவு கிட்டவே, வாயுணவை மறந்துவிடுகிறது; உண்ணுமல், அசையாமல் கல்போல் நிற்கிறது. அவ்வளவு இன்பமாகச் செவியுணவை அனுபவிக்கிறது!

"ஐயறிவை மாத்திரம் உடைய ஒரு விலங்கு, அதுவும் ஒரு எருமைக்கடா, இசையின்பத்தில் இவ் வாறு ஒன்றி நின்றதென்ருல், ஆறறிவுடைய மக்கள் இசைக்கலையில் எவ்வளவு மேம்பாடு எய்தியிருப்பார் கள்? இசைக்கலையில் இவ்வளவு தேர்ச்சி பெற்றிருப்ப வர்கள் ஏனைய கலைகளில் எவ்வளவு உயரிய நிலையில் இருந்திருக்கவேண்டும்? இவர்களுக்கெல்லாம் அரசனாக இருப்பவன் இக்கலைகளிலெல்லாம் எவ்வளவு தேர்ச்சி பெற்றிருக்கவேண்டும்?" என்பன போன்ற எண்ணங் களின் அலைகளை ஒன்றன்பின் ஒன்ருகத் தமயந்தியின் மனத்தில் எழுப்புகிருள் இந்த ஒரு சிறிய காட்சியின் வாயிலாக.

அதே கவியில் 'பாலொடு தேன் கலந்ததுபோல்

"செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்"

என்ற திருக்குறளின் கருத்தையும் மிக நயமாகக் குழைத்து வைத்திருக்கும் நேர்த்தி உள்ளுதோறும் பாவின் சுவையை மிகுவிக்கிறது.

## சரியான தண்டனை !

ஒருவரை ஒருவர் ஏமாற்றுவதற்கும் நம்பிக்கை இழப்புச் செய்வதற்கும் கடுஞ்சிறை இருப்புக்கொடுக்க வேண்டுமென்று இந்தியன் பீனல் கோட் (The Indian Penal Code) என்ற சட்டத்தின் 417-வது பிரிவு கூறுகிறது. அரசியலார் ஒறுக்க மறுத்தாலும் அல்லது ஒறுத்தல் செய்யக் காலத்தாழ்ப்புச் செய்தாலும் பொது மக்கள் சட்டங்களைத் தங்கள் கைக்கொண்டு குற்றவாளி களுக்குப் பாடம் கற்பித்து விடுவார்கள். மக்கள் ஆட்சி நடைபெறும் இன்றைய உலகில் இத்தகைய நிகழ்ச்சிகள் மிக இயல்பாக உள்ளன. மகாத்மா காந்தியின் மறைவு குறித்து நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளுள் பல இவ்விதமானவை.

❖ ❖ ❖ ❖ ❖

உலகில் பலதிறப்பட்ட நூல்கள் பல துறைகளி லும் இருக்கின்றன. இவற்றுள் இலக்கிய நூல்கள் தலை . சிறந்தவை என்பது அனுபவம் காட்டும். ஏனெனில், இலக்கிய நூல்கள் படிப்போருக்கு இன்பத் தைக் கொடுத்து அவர்களின் வாழக்கையைச் செப்பம் செய்ய வல்லன. இலக்கியத்தை உலகியல் இலக்கியம் என்றும் சமய இலக்கியம் என்றும் இருவகைப்படுத்த லாம். பொது மக்களுக்கும் சமயக் கொள்கைகள்

எட்டும்படி, செய்யவல்லன புராணங்கள் எனப்படும் பழங் கதைகள். புராணங்கள் பாமரமக்களுக்கென் எழுதப்பட்டனவாதலால் அவற்றுள் பல புனைந்துரை கள் மலிந்திருப்பது இயற்கை. மெய்ப்பொருளை மட்டிலும் இலக்காகக் கொண்டு புராணங்களைப் படித் தல் சாலப் பயன் தரும்.

காஞ்சி புராணத்தில் நாட்டுப் படலத்திலும் நகரப்படலத்திலும் பல நயமான கற்பனைகள் உள. அவை படிப்போருக்குப் பேரின்பம் தரவல்லன. பெரிய சைவ சித்தாந்தக் கருத்துக்களும் சாதாரண பொருள் களைக்கொண்டு தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. இக்கருத்துக்கள் கதைகள் மூலமாகவும் விளக்கப் பட்டிருக்கின்றன.

ஒருகால் உமாதேவியார் சிவபெருமானை வணங்கி, அவரை இகழ்ந்த தக்கனிடம் வளர்ந்து தாட்சாயணி என்று பெற்ற பெயரையும், வளர்ந்த உடலையும் விட்டுவிட வேண்டினர். அங்ஙனமே சிவ பெருமானும் உமையைத் தன் மகளாக வளர்க்க வேண்டும் என்று கடுந்தவம் புரியும் பனிமலையரசன் பாவையாகச் செல்ல அருள் புரிந்தார். அங்ஙனமே உமையும் அம்மலையரசன் காணும்படி ஒரு தாமரை மலரின்மீது குழந்தையாக விருக்க, மலைய்ரசன் அக் குழந்தையை எடுத்துச் சென்று வளர்த்து வரலானன்.

இங்ஙனமிருக்க, சிவபெருமானர் திருக்கைலாய மலையின் தென் சிகரத்தில் இருக்கும் கல்லால நிழலின் கீழ் தென்முகக்கடவுள் வடிவினராய் எழுந்தருளியிருந்

தார். அப்போது பிரம்மதேவனது எண்ணத்தாற் பிறந்த மக்களாகிய சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நான்கு மறையவர்களும் மறைநூற் பொருளையும் மறைமுடிவுப் (உபநிடதப்) பொருளையும் பெற்றார்கள். பெற்றும் அவர்கள் மாயையினால் மெய்யுணர்வு நிலை பெற முடியவில்லை. பிறகு நெடுங்காலம் தவம் செய்து திருக்கைலாய மலையை அடைந்து நந்திதேவரின் உதவியால் சிவபெருமானாரின் காட்சியைப் பெற்றார்கள். தங்களால் மெய்யுணர்வுநிலை பெற முடியவில்லை என முறையிட்டுத் தங்கள் மதிமயக்கத்தை நீக்கும்படி வேண்டினார்கள். சிவபெருமானும் மறைமுடிவுத் துணிவுப் பொருளைத் தனியாக அற்றத்தில் செவியறிவுறுவிக்கத் திருவுளங்கொண்டார். தான் அப்பொருளை உணர்த்தும்பொழுது மன்மதனைத் தவிர மற்றைய தேவர்களை உள்ளே விடுக்காதிருக்க நந்தி தேவருக்கு ஆணையிட்டார்; நந்தி தேவரும் விழிப்பாக ஏமாறுதிருந்து காவல் செய்து வந்தார்.

சிவபெருமானார் முனிவர்கள் நால்வருக்கும் திவ்விய ஆகமங்களில் சொல்லப்படும் சரியை கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பிரிவுகளுள்ளும் முதல் மூன்றையும் செவியறிவுறுத்தியருளினார். முனிவர்கள் ஞானப்பிரிவினையும் செவியறிவுறுத்தியருளும்படி வேண்டினார்கள். இது வாயினாற் சொல்லமுடியாதென்று கூறி அந்நெறியை உணர்த்தும்பொருட்டுத் தனது மார்பில் திருக்கரத்தைச் சேர்த்து சொல்லாக் குறியைக் (மௌன முத்திரை) காட்டி, ஒரு கணம் ஒரு செயலுமின்றி யோகம் செய்வார்போல் எழுந்தருளியிருந்தார். முனிவர்களும் தங்கள் மனம் ஒடுங்கி மூன்று மூக்கும் நீங்கப்பெற்றுச் சிவஞானத்தை அடைந்தார்கள்.

இங்ஙனம் ஒரு கணம் இருப்பதற்குள் பிரம்மா திருமால் முதலிய தேவர்கட்கெல்லாம் பற்பல ஊழிகள் சென்றன. சிவபெருமான் பனிவரை மங்கையாரைப் பிரிந்து யோகத்திலிருந்ததால் மன்மதன் இருந்தும் ஆண் பெண் முயக்கம் இல்லாது போய்விட்டது. உயிர்கள் எல்லாம் நாள்தோறும் குறைந்துகொண்டே வந்தன. தேவர்கள் எல்லோரும் இதனைப் பிரம்மதேவனிடம் முறையிட்டார்கள்.

தேவர்கள் எல்லோரும் வேண்டிக்கொண்டபடி பிரம்மதேவன் சிவபெருமான்மீது மலரம்புகளை ஏவி உமாதேவியாரைத் திருமணம் புரிந்துகொள்ள ஏற்பாடு செய்யும்படி மன்மதனை அனுப்பினார். மதனனும் மெதுவாகச்சென்று மலரம்புகளை மெதுவாக விட்டான். அவை அவரது திருமேனியில் பட்டதும், அவர் மன்மதனைச் சிறிதுநேரம் பார்த்தார். அவ்வளவுதான்; மன்மதன் சாம்பலானான்.

பிறகு சிவபெருமான் தவஞ்செய்து நின்ற உமா தேவியாரைத் திருமணம் செய்துகொண்டார். இது புராண வரலாறு.

இறைவன் உயிர்களுக்குப் போகத்தை அளிப்ப தற்காகவே, மங்கை பங்கராய்ப் போக வடிவத்தைக் கொண்டுள்ளார்; உயிர்களுக்கு வீடு பேற்றை அளிப் பதற்காகவே அம்மையைப் பிரிந்து யோக வடிவத்தை யும் கொண்டிருப்பார். இது அருள் நூல்களின் கருத்து.

ஞானிகள் இறைவனைச் சிறந்த மறைமுடிப் பொருளாகிய ஓங்காரவடிவமாக ஓர்ந்திருப்பர். ஆகவே 'ஓம்' மொழிப் பொருள் என்றால், எல்லாம் வல்ல இறைவனைக் குறிக்கும். இவ்வோங்காரம் மூலவொலி, மறைமுதல் என்ற பெயர்களாலும் வழங்கப்படும். இவ்வோங்கார உண்மைகளை மெய்கண்ட நூல்களி லிருந்து அறிந்துகொள்ளலாம்.

காஞ்சிபுரத்திலுள்ள சைவ மடத்தில் அதிகாலை யில் எழுந்து பல சைவ மாதவர்கள் ஒருங்கிய உள்ளத் தினராயிருக்கிறார்கள். இந்தச் செய்தியைக் காஞ்சி புராண ஆசிரியர் மிக நயம்பட உரைக்கிறார். கவிஞ ரின் செய்யுள் படிப்போருக்கு மிக இனிமையாக இருக்கிறது.

"காஞ்சியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பப் பெருமான் காமத்தை விளைவிக்கும் மன்மதனை அழித் தார்; சிறந்த யோகியர்போல் நீண்ட சடைமுடியை யணிந்துகொண்டிருக்கிறார்; அழகிய காவி உடையை யும் அணிந்துகொண்டிருக்கிறார். நாம் எல்லாம் அவரை ஒப்பாரும் மிக்காரும் இல்லாத துறவி எனக்கொண்டு போற்றி வணங்கி வருகின்றோம். அவரும் அதனை ஏற்று அங்ஙனமே இருந்து வருகிறார். இருப்பினும் துறவு நிலைக்குப் பெருங் குற்றத்தை விளைவிக்கும் கூடா வொழுக்கமாகிய இணை விழைச்சை உடையவராயிருக் கிறார்; உமையம்மையார் தன்னைப் புல்லியதால் உண் டாகிய கொங்கைத் தழும்பையும் பூண்டிருக்கிறார். இது நமது துறவு நிலைக்கே ஒரு பெரிய குறையை உண்

டாக்குகிறது. தவிரவும் நமக்கும் இது ஒரு பெரிய இழிவாகின்றது. இத்தலையவரைச் சிறையிடுதலே தகும். நம்பிக்கைக் குற்றம் செய்தவருக்கு இதுதான் சரியான தண்டனை!" என்று முடிவுகட்டுகிறார்கள்; அங்ஙனமே தமது மனக் குகையில் சிறையிடுகிறார்கள். இறைவனே தவறான பாதையில் சென்றதால், முனிவர்கள் சட்டத்தைத் தமது கையில் கொண்டு ஒறுக்கத் தொடங்கி விடுகிறார்கள்.

ஒருங்கிய உள்ளத்தால் ஓர்ந்திருக்கும் காட்சியை ஒரு புராண வரலாற்றுடன், ஒரு தத்துவத்தையும் சேர்த்துக், கற்பனை நயம் தோன்றப் பாடியுள்ள கவிதையைப் படித்து உணர உணரப் பேரின்பம் உண்டாகிறது. கவிதை வருமாறு;

"காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக்
கவின்றகல் லாடைமேற் புனைந்து
யாமெலாம் வழுத்தும் துறவியென் றிருந்தும்
ஒருத்திதன் இளமுலைச் சுவடு
தோமுறக் கொண்டார் எனச்சிறை யிடல்போல்
சுடர்மனக் குகையுள் ஏகம்பத்து
'ஓம்'மொழிப் பொருளை அடக்கிஆ னந்தம்
உறுநர்வாழ் இடம்பல உளவால்"

— காஞ்சிபுராணம் (திருநகரப்படலம் 109.)

[காமன் - மன்மதன்; முனிந்து - வெகுண்டு; கவின்ற - அழகிய; கல்லாடை - காவிஉடை; வழுத்தும் - வாழ்த்தும்; ஒருத்தி - காமக்கண்ணி அம்மையார்; சுவடு - தழும்பு; தோம் - குற்றம்; சுடர் - ஒளி; மனக்குகை - மனமாகிய குகை; ஆனந்தம் - சிவப்பேற்றின்பம் ]

# செந்தமிழ்த் தீனி.

மாலை வேளை. ஒரு சிறிய முற்றம். முற்றத்தில் கோழிக் குஞ்சுகட்கும், புறாக் குஞ்சுகட்கும் 'தீனி' போடப்படுகிறது. பெண்ணொருத்தி சோளம், கம்பு போன்ற தானியங்களை முற்றத்தில் இறைத்துச் 'சிட்டுகளை'க் கூட்டிலிருந்து திறந்துவிடுகிறாள்.

சிட்டுக்களை அடக்குவது மிகக் கடினம. கூடுகளைத் திறந்துவிட்டால் அவை ஒழுங்காக முற்றத்துக்கு வந்து சேரா. அங்குமிங்கும் களிப்புடன் ஓடி விளையாடும். அவற்றை மடக்கி ஒன்றுசேர்த்து முற்றத்துக்குக் கொண்டுவந்து சேர்ப்பது ஒரு பெரிய வேலை.

ஆம்; பெரிய வேலைதான். அவள் மிக வருத்தப்பட்டு அவைகளைக் கொண்டுவந்து சேர்க்கிறாள். அவை தானிய மணிகளை ஒவ்வொன்றாக எடுத்து ஆர்வத்துடன் விழுங்குகின்றன. பெரிய பறவைகளாக இருந்தால், பலமணிகளை ஒருசேர எடுத்து விழுங்கும்.

சிட்டுகளுக்குத் தீனி போட்டதையும், தீனி போட்டு வேறு வேலையில் ஈடுபட்டதையும் தமிழ்ப் பாவலர் ஒருவர் நேரில் பார்க்கிறார்; நிகழ்ச்சிகள் அவரது நெஞ்சில் பதிகின்றன.



அது ஒரு தமிழ்க் குடும்பம்; தமிழ் மகனது குடும்பம். இது குடும்பம் எப்படியிருக்கவேண்டும் என்று எடுத்துக்காட்டாக இருக்கும் ஒரு குடும்பம் என்றே சொல்லலாம். இந்த வீட்டில் வேலைக்காரனும் இல்லை; வேலைக்காரியும் இல்லை. எல்லாவற்றிற்கும் பிறர் கையை எதிர்பார்ப்பது நிலையற்ற செய்கை எனக் கருதி 'ஊழியர்களை' வைத்துக்கொள்ளவில்லை. 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்'களாக இருக்கவேண்டுமென்ற பாவலர் பாரதியாரின் அறைகூவலைக் கேட்டு அறிவுலகம் விரைந்து வேலை செய்து வருவதையும், இவ் வையத்தின் நோக்கம் அதுவே என்பதையும் இக் குடும்பத்தினர் நன்கு அறிந்திருந்தார்கள்.

காலை நேரம்; பிள்ளைகள் காலை அமுது உண்கிறார்கள். வீட்டுத் தலைவி சுவடிகளை ஒன்றாக அடுக்கிக் குழந்தைகளுக்கு நல்லாடை புனைந்து, 'புன்னை இலை போன்ற புதையடிச் செருப்புக்களை' அவர்கள் காலில் செருகி அவர்களைப் பள்ளிக்கு அனுப்புகிறாள். தானும் தெருவரையில் நடந்து வந்து பள்ளியை நோக்கித் தள்ளாடி நடக்கும் பிள்ளைகளின் பின்னழகு வெள்ளத்தைப் பருகி மகிழ்கின்றாள். தினந்தோறும் காலை நேரத்தில் ஒரு சிறு பகுதி இந்த விதமாகக் கழிகிறது.

மாலை வேளை; பள்ளியிலிருந்து பிள்ளைகள் திரும்பும் நேரம். குழந்தைகளின் மீது அவள் உயிர். அவர்களை எதிர்பார்த்தவண்ணமாகத் தெரு வாசற்படியில் நின்றுகொண்டிருக்கிறாள். குழந்தைகள் வேறு பள்ளிப் பிள்ளைகளுடன் சேர்ந்து ஆடிக்கொண்டும்,

பாடிக்கொண்டும் வருகிருர்கள். புது வெள்ளத்தை எதிர்நோக்கி வரவேற்கும் உழவர்களைப் போல ஓடி மக்களை இரு கையாலும் ஏந்தி, உச்சிமோந்து, முத்த மிடுகிருள். பின்னர் முகத்தைக் கழுவிப் பொட்டிட்டு, வேற்றுடை அணிவித்து, சிற்றுண்டி அருத்தி, அவர் களைக் கடற்கரைக்கு அழைத்துச் செல்கிருள் காற்று வாங்க. பல காட்சிகளைக் கடற்கரையில் கண்டு களித் துக்கொண்டே காற்று வாங்குகிருர்கள். கையெழுத்து மறைகிற நேரம் ஆகிறது. வீடு திரும்புகிருர்கள். நாள்தோறும் மாலை நேரத்தில் ஒரு பகுதி இம்மாகிரி யாகக் கழிகிறது.

வீடு அடைந்ததும் விளக்கேற்றி வீட்டிற்குள் நறும்புகை எழுப்புகின்ருள். விளக்கருகே குழந்தை களை உட்கார வைத்துப் படிக்கச் செய்கிருள். பிள்ளை களைப் படிக்கச் செய்வது பெரிய வேலை. விளக்கருகில் உட்காரவைத்தால் போதும் என்றிருக்கும். பிள்ளைகள் சுவடிகளை எடுத்துக்கொண்டு "ஆனு, ஆவென்னு, ...... சானு, சாவென்னு" என்று பெரிய குரலுடன் படிக்கத் தொடங்குகின்றனர். இந்த 'இரைச்சல்' இன்பத்தைப் பருகிக்கொண்டே இரவு உணவை அமைக்கிருள்.

குழந்தைகள் அரை வகுப்பில் (முதல் வகுப்புக் குக் கீழ் வகுப்பு) படிக்கின்றனர்; எழுத்துக்களையே சரிவர அறியார். இவர்கள் எங்ஙனம் சொற்களையும், சொற்ருெடர்களையும் படிக்கப்போகிருர்கள்? எழுத் துக்களையே தப்பும்தவறுமாக உளறிக்கொட்டுகிருர்கள். அது அவளுக்கு மழலைச்சொற்போல் இன்பம் தருகிறது;

சுவடியிலுள்ள செந்தமிழ்த் தீனியை வெகு பிரியமாக உண்கின்றனர் என்று நினைக்கிறாள். இந்த நிகழ்ச்சியினையும் பாவலர் காண்கிறார்.

❖ ❖ ❖ ❖ ❖

இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் கவிஞர் உள்ளத்தில் ஒன்றுசேர்ந்து ஒரு கவிதையாக உருவெடுக்கின்றன. சிட்டுக்களுக்குத் தீனியிட்ட சேடியின் செயலும், பிள்ளைகளுக்குச் செந்தமிழ்த் தீனியிட்ட தலைவியின் செயலும் ஒன்றுசேர்ந்து 'பாலொடு தேன் கலந்தது போல்' சுவை மிகுந்து ஒரு அழகான சொல்லோவியமாக வெளிப்படுகிறது. பாவலரது படம் வருமாறு:

"கட்டுக்குள் அடங்கா தாடிக்
களித்திடும் தனது செல்வச்
சிட்டுக்கள் சுவடிக் குள்ளே
செந்தமிழ்த் தீனி உண்ண
விட்டுப்பின் அடுக்க றைக்குள்
அமுதத்தை விளைவு செய்தாள்"

— பாரதிதாசன் (குடும்பவிளக்கு)

பாவலரின் படம் சங்க இலக்கியப் படங்கள் போல் காட்சி அளிக்கிறது. உலக இயற்கையையும் மக்கள் இயற்கையையும் கூர்ந்து ஆழ ஆராய்ந்து புலப்பட்ட உண்மைகளைப் புலப்பட்டவாறே, தன்மை நவிற்சியணி செறியுமாறு, உள்ளக் கிளர்ச்சியுடன், அக்கிளர்ச்சிதோன்ற வெளியிட்டுள்ள திறனை உள்ளுந்தோறும் உவகை மிகுகிறது.